


மகிழ்ச்சி அலையில் படகுப் பயணம், பிக்னிக்கின் உண்மையான சுவை.

**பார்லே-ஜீ**

சுவை மிகுந்தது, சக்தி நிறைந்தது.

இந்தியாவில் அதிக விற்பனையாகும் பிஸ்கட்.

everest/93/PP/171-tm

# மங்கை

மார்ச் '94

★ பரமாச்சாரியார்

(வானில் கலந்த முனிவரின் வாழ்வில் கண்டதும் - கேட்டதும்)

★ ஸ்ரீஜயேந்திரர் பதில்கள்

★ ஊதுவத்தி தொழிற்சாலையில் பெண்கள்

★ மனக்கட்டுப்பாடே முதல் மருந்து

★ ரியல் எஸ்டேட் நடத்தும் பெண்மணி

★ அழகும் ஆரோக்கியமும் அளிக்கும் அக்குபஞ்சர் சிகிச்சை முறை

★ பேஷன் உலகம்

மூன்று சிறுகதைகள், பல கட்டுரைகள் மற்றும் வழக்கமான பகுதிகளுடன்

விலை ரூ.6/-

Statement about ownership of AMBULIMAMA (Tamil)
Rule 8 (From VI), Newspapers (Central) Rules, 1956

| | |
|---|---|
| 1. Place of Publication | CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras - 600 026. |
| 2. Periodicity of Publication | MONTHLY<br>Ist of each calender month |
| 3. Printer's Name<br>Nationality<br>Address | B.V. REDDI<br>INDIAN<br>Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras - 600 026 |
| 4. Publisher's Name<br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI<br>INDIAN<br>Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras - 600 026 |
| 5. Editor's Name<br>Nationality<br>Address | B. NAGI REDDI<br>INDIAN<br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras - 600 026 |
| 6. Name and address of<br>Individuals who own the paper | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS :<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA (Minor)<br>(Minor admitted to the benefits of Partnership)<br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras - 600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Ist March 1994

B. VISWANATHA REDDI
Signature of the Publisher

## உங்கள் கனவின் நிறைவு அவன் கண்களில்
## அவனது எதிர்காலம் உங்கள் கைகளில்



# குழந்தைகள் பரிசு வளரும் நிதி.

## உங்கள் அன்பைப் போலவே அது வளர்கிறது, வளர்கிறது, வளர்ந்து கொண்டே போகிறது.

நீங்கள் அவனது தேவை ஒவ்வொன்றையும் பார்த்து, பார்த்து பூர்த்தி செய்து, தினத்தின் ஒவ்வொரு நிமிடத்தையும் பாதுகாப்பாக உணரச் செய்கிறீர்கள். அவனது எதிர்காலத்தைப் பற்றி சிந்திக்க சிறந்த சமயமும் இதுதானே. உங்களின் இன்றைய சிறிது சிந்தனை உங்கள் கண்மணியின் வளமான எதிர்காலத்திற்கான பரிசாக மாறும். எப்படியா? இதோ நாங்கள் அளிக்கும் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. இதில் ஒரே முறையாக குறிப்பிட்ட தொகையை முதலீடு செய்யுங்கள் அல்லது ஆண்டுதோறும் சிறிது சிறிதாகவும் முதலீடு செய்யலாம். உங்கள் முதலீடும் வளர்ந்து கொண்டே வரும் உங்கள் கண்மணியின் வயது 21 ஆகும்வரை, அவன் லட்சாதிபதியாவதைக் காணலாம். இப்பரிசு எப்படி உபயோகமாகும் என்பதைக் காணுங்கள். உங்கள் கண்மணியின் மேல்படிப்பிற்கு அல்லது சொந்தமாக தொழில் தொடங்க உதவலாம் அல்லது அவன் சொந்தமாக வீடு வாங்கலாம். அவன் 18 வயதான பிறகு வருடத்திற்கு இரு முறை பணத்தை எடுக்கலாம், மீதமுள்ள முதலீடு 21 வயதாகும் வரை வளர்ந்து கொண்டே இருக்கும். குழந்தைகள் பரிசு வளரும் நிதி. ஒரு நாள் உங்கள் கண்மணி உங்களுக்கு நிச்சயமாக நன்றி செலுத்துவான்.

**14% டிவிடெண்ட். 3 வருடங்களுக்கு ஒருமுறை போனஸ்.**




**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் மேலான எதிர்காலத்திற்கென

எல்லா செக்யூரிட்டீஸ் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவையாகும். முதலீடு செய்வதற்கு முன் உங்கள் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.

---

**மண்டல அலுவலகம்:** 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
**கிளை அலுவலகங்கள்:** • **கோயம்புத்தூர்.** போன்: 210399 • **சென்னை.** போன்: 517101, 517190 • **மதுரை.** போன்: 38186 • **திருச்சி.** போன்: 32619

UTI.131.93 TM E




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## தேர்வு பயம் ஏனோ!



மார்ச் மாதம் வந்ததுமே மாணவர்கள் பயந்து நடுங்குகிறார்கள். ஏனெனில் இந்த மாதம் முதல் மே மாதம் வரை பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தேர்வுகள் நடைபெறுகின்றன. இவற்றில் தேர்வு பெற்றாலே மேல் வகுப்பிற்குப் போவதோ, பட்டங்கள் பெறுவதோ முடியும்.

மாணவர்கள் வருட ஆரம்பத்திலிருந்தே ஆசிரியர்கள் கூறுவதைக் கவனமாகக் கேட்டும், பாடக் குறிப்புகளை தினமும் ஒழுங்காக எழுதியும் வந்தால் எப்படிப்பட்ட தேர்விலும், இவர்கள் வெகு எளிதாகத் தேர்ந்துவிட முடியும்.

எனவே பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மாணவர்கள், தம் பாட வேலைகளை ஒழுங்காகச் செய்தால் தேர்வுகளில் தவறான முறையற்ற வழிகளைக் கையாள்வதையும் விட்டுவிடலாம். ஆய்வாளர்களை ஏமாற்றி 'காப்பி' அடிப்பதையும் அறவே விட்டொழிக்கலாம்.

ஏமாற்று வேலைகளாலும், முறையற்ற வழிகளைக் கையாண்டு தேர்வுகளை எழுதும் மாணவன் ஆசிரியரையும் மற்றவர்களையும் ஏமாற்றுவதோடு தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறான். முறையற்ற வழிகளின் வாயிலாகத் தேர்வு பெறும் மாணவன் தன் மேல் வகுப்பிலோ அல்லது வெளி உலகிலோ முன்னேற்றம் காண முடியாது.



எனவே மாணவர்கள் இத்தகைய ஏமாற்று வேலைகளில் இறங்காமல் தாமே தேர்வுகளில் நன்கு விடைகள் எழுதும் ஆற்றல் நமக்கு உண்டு என்ற நம்பிக்கையுடன் தேர்வுகளை எழுதி வெற்றி பெற வேண்டும். இத்தகைய மாணவர்களே பிற்கால வாழ்வில் முன்னேற முடியும் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

மதிமுகம்: 94 மார்ச் 1994 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# பொம்மை

திரையுலகின் நட்சத்திரப் பத்திரிகை

மாதம் ஒருமுறை மலரும்
சிறப்புமிக்க வண்ண இதழ்

நட்சத்திர பேட்டிகள்,
சிறந்த சினிமா செய்திகள்,
வண்ணப் படங்கள்,
ரசிகர்களின்
விருப்பம் போல
என்றும் புதுமையுடன்
மலரும்

## பொம்மை

தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

பெரிய அளவில்,
புதிய பகுதிகளுடன்,
ஒவ்வொரு மாதமும்
வெளிவருகிறது

விலை ரூ. 6/-
வருட சந்தா: ரூ. 72-00

இது ஒரு டால்டன் வெளியீடு

# செய்திகளும் தகவல்களும்

# மஹாமஸ்தகாபிஷேகம்

கும்பகோணம் மகாமகம் போலவும் அலகாபாத் கும்பமேளா போலவும் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பாஹுபலி மஹாமஸ்தகாபிஷேகமும் நடைபெற்று வருகிறது. கர்நாடக மாநிலத்தில் ஹசன் மாவட்டத்திலுள்ள சிரவண பௌகொளா அருகேயுள்ள இந்திரகிரிக்குன்றின் மீது பாஹுபலியின் கற்சிலை உள்ளது. உலகிலேயே மிக உயரமான ஒரே கல்லாலான விக்கிரகம் இது. இருபதாவது நூற்றாண்டில் இதற்கு எட்டு தடவை மஹாமஸ்தகாபிஷேகம் நடைபெற்றது. அண்மையில் 1993 டிசம்பர் 19ந்தேதி மிக விமரிசையாக இந்த அபிஷேகம் நடைபெற்றது.

இருபத்திநான்கு தீர்த்தங்கரர்களில் கடைசி தீர்த்தங்கரரான வர்த்தமான மகா வீரர் ஜைன மதத்தை நிறுவினார். முதலாவது தீர்த்தங்கரர் ஆதிநாத ரிஷப தேவர். இவர் மன்னரானாலும் இவ்வுலகப் பந்தங்களிலிருந்து விடுபட்டு தன் மூத்த மகன் பரதனுக்கு அயோத்தியையும் இளைய மகன் பாஹுபலிக்கு பௌதன புரத்தையும் கொடுத்தார். பரதன் பாஹுபலிக்குக் கொடுத்த நாட்டையும் கைப்பற்ற எண்ணிப் போர் தொடுத்தான். போரால் அப்பாவி மக்கள் மடிவார்கள் என இருதரப்பு அமைச்சர்களும் தம் மன்னர்களுக்கு எடுத்துக் கூறி அவர்கள் இருவர் மட்டும் மற்போர் புரிந்து வெற்றி காணச் சொன்னார்கள். அதன்படி நடந்த மற்போரில் பரதன் தோற்றுப் போனான்.



பாஹுபலி பரதனை உயரத் தூக்கித் தரை மீது அறையப் போனான். ஆனால் உணர்ச்சி வசப்பட்டு அவன் அகக் கண் திறந்தது. அதிக ஆசை, அகம்பாவம் என்பவை தன் அண்ணனை எப்படி சீர்குலைத்துவிட்டது என பாஹுபலி கண்டான். அதனால் தன் நாட்டைத் துறந்து அவன் போய்விட்டான்.

பரதன் பாஹுபலியைத் தடுத்தும் அவன் தன் எண்ணத்தை மாற்றிக் கொள்ளவில்லை அவன் உணவு உண்ணாமல் இரவும் பகலும் நின்ற நிலையில் தவம் புரிந்தான். அவனைச் சுற்றிச் செடி கொடிகள் முளைத்தன. பரதன் அவனிடம் ''சிரவணா! எல்லாம் உனதே. ஏற்றுக் கொள்'' எனக் கதறினான். ஆனால் பாஹு பலி உறுதியாக இருந்து தவம் செய்து மோட்சம் அடைந்தான். பரதன் பாஹுபலி

யின் தங்கச் சிலையை உருவாக்கி பௌதன புரத்தில் நிறுவினான்.

பத்தாவது நூற்றாண்டில் கங்க வம்சத்து ராசமல்ல சமஸ்தானத்து அமைச்சனாக சாமுண்டராயன் இருந்தான். அவனது தாய் கல்லல் தேவிக்கு பாஹுபலியின் தங்க விக்கிரகத்தைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அவள் தன் மகனையும் குருவான அஜித்சேனரையும் அழைத்துக் கொண்டு பௌதனபுரத்திற்குக் கிளம்பினாள். அவர்கள் நடுவழியில் இந்திரகிரி, சந்திரகிரி என்ற இருமலைகளுக்கிடையே தங்கினார்கள். அன்றிரவு மூவரும் ஒரே விதக் கனவைக் கண்டார்கள். கனவில் கும்மந்தினி தேவி தோன்றி "பௌதனபுரத்தில் உங்களுக்கு பாஹுபலியின் தங்க விக்கிரகம் தென்படாது. சந்திரகிரி மீது நின்று தென்திசையில் இந்திரகிரியை நோக்கி அம்பை எய்யுங்கள்" எனக் கூறினாள். மறுநாள் காலை சாமுண்டராயன் அவ்வாறே அம்பை எய்ய அந்த அம்பு விழுந்த இடத்தில் பாஹுபலியின் உருவம் தென்பட்டது.

சாமுண்டராயன் அங்கு பாஹுபலியின் சிலையை நிறுவத் தீர்மானித்துச் சிற்பிகளை வரவழைத்தான். அரிஷ்டநேமி என்ற சிற்பியின் தலைமையில் விக்கிரவேலை தொடங்கியது. ஒரே கல்லில் செதுக்கப்பட்ட இந்த பாஹுபலியின் சிலை 57 அடி. கம்பீரமாக அமைதியைப் போதிக்கும் நிலையிலுள்ள இந்தச் சிலையை கிபி. 981 மார்ச் 13ல் சாமுண்ட ராயன் பிரதிஷ்டை செய்து முதலாவது மஹாமஸ்தாகாபிஷேகத்தைச் செய்தான். சாமுண்டராயனுக்கு கோமட் என்ற மற்றொரு பெயர் உண்டு. அவன் நிறுவிய சிலையை கோமடேஸ்வரர் என மக்கள் கூறலாயினர்.

இச்சிலையின் கால்களருகே ஒரு சிறிய குளம் உள்ளது. இதைக் கன்னட மொழியில் பௌகொள என்கிறார்கள். எனவே ஜைன மதத்தைச் போதிக்கும் இச்சிலை உள்ள இடம் சிரவண பௌகொள எனப் பெயர் பெற்றது. இந்த உயரமான சிலை சிற்பக் கலையின் சிகரமாக விளங்குகிறது. மகாமஸ்தகாகபிஷேகம் பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடப்பது என்றாலும் இந்த நூற்றாண்டில் நடந்த எட்டு மஸ்தகாபிஷேகங்களும் சற்று முன்பின் நடந்திருக்கின்றன. இவை நட்சத்திரம், கிரகம் ஆகியவற்றின் அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டதால் இந்த வித்தியாசம் தென்படுகிறது. இவை 1900, 1910, 1923, 1940, 1953, 1967, 1981, 1993 வருடங்களில் நடைபெற்றன. 1993ல் நடந்தது 85வது மகாமஸ்தகாபிஷேகம் ஆகும்.

## அபிஷேக முறை

பூஜைக்கான ஏற்பாடுகள் மஹாமஸ்தாபிஷேக தினத்திற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்பே தொடங்கிவிடுகின்றன. ஆனால் அபிஷேகம் செய்து முடிக்க ஆறு மணி நேரமே ஆகிறது. முதலில் கரும்புச் சாற்றாலும், பாலாலும் மூலிகை ரசத்தாலும் இச்சிலைக்கு அபிஷேகம் நடக்கிறது. அதன்பின் கீழேயுள்ள குளத்து நீராலும் நாட்டில் பல நதிகளிலிருந்து கொண்டுவரப்பட்ட 1008 குட நீராலும் அபிஷேகம் செய்கிறார்கள். அதன்பின் மூன்று வகைச் சந்தனக் குழம்பாலும், பல்வித மலர்களாலும் மஸ்தகாபிஷேகம் செய்யப்படுகிறது. அதன்பிறகு நீரால் அபிஷேகம் செய்து முற்றும் துறந்த பாஹுபலிக்கு எட்டுவித பழங்களையும் மலர்களையும் சமர்ப்பித்து வழிபடுகிறார்கள்.




# வீண் ஆசை ஏன்?

திரூரில் ஒரு சங்கீத வித்வான் கூட இல்லாவிட்டாலும் அவ்வூரிலுள்ள சஞ்சீவியின் கடையில் வீணை செய்யப்பட்டு விற்கப் பட்டது. அவன் அதனை நன்கு செய்து கொடுத்து வந்ததால் அவனது பெயர் பல ஊர்களில் பரவி இருந்தது.

சஞ்சீவி கிழவனாகிவிடவே தன் மகன் ராமப்பாவையும் தன் தொழிலில் பழக்கித் தன் கடையை பார்த்துக் கொள்ளச் செய்தான். திருருக்கு அருகே உள்ள மலையில் நல்ல உயர்ரக மரங்கள் இருந்ததால் அவற்றைக் கொண்டு செய்யப்பட்ட வீணைகள் உயர்தரமாக அமைந்தன. ராமப்பா அவ்வப்போது ஆட்களை அழைத்துப் போய் அம்மலையிலுள்ள நல்ல மரங்களைத் தேர்ந்தெடுத்து அறுக்கச் சொல்லி அவற்றை எடுத்து வந்து வீணைகள் செய்து வந்தான்.

திரூர் வீணைகளைப் பற்றி அந்நாட்டு இளவரசி கேள்விப்பட்டாள். எனவே அவள் ஒரு ஆளைத் திருருக்கு அனுப்பி ஒரு வீணை வாங்கி வரச் சொன்னாள். அந்த ஆளும் ராமப்பாவிடம் இளவரசி சந்திரிகாவின் விருப்பத்தை ராமப்பாவிடம் கூறினான்.

ராமப்பாவும் "தற்போது ஒரு வீணை கூட இல்லை. ஆனால் ஒரு வாரத்தில் வீணை தயார் செய்து நானே எடுத்து வந்து இளவரசியிடம் கொடுக்கிறேன்" என்று கூறி அந்த ஆளை அனுப்பினான்.

மறுநாள் காலை ராமப்பா ஒருஆளை அழைத்துக் கொண்டு மலைக்குப் போனான். அங்கு அவன் பல மரங்களைப் பார்த்து

—கி. அருணா—



விட்டு முடிவில் ஒரு மரத்தைத் தேர்ந்தெடுத்து அதை வெட்டும் படித் தன் ஆளிடம் கூறினான். அந்த ஆளும் அந்த மரத்தை வெட் டத் தன் கோடாலியை எடுத்து ஓங்கினான்.

அப்போது ஒருகுரல் "நிறுத்து, நான் வசிக்கும் இடத்தை அழிக் காதே" என்றது. அது ஒரு பெண் ணின் குரலாக இருக்கவே ராமப்பா சுற்றிலும் பார்த்தான். அப்போது அவன் முன் ஒரு யட்சிணி வந்து நின்றாள். ராமப்பாவும் அவனோடு வந்த ஆளும் நடுங்கினார்கள்.

அப்போது யட்சிணி "நீ ஏன் இதை வெட்ட விரும்பிகிறாய்?" என்று கேட்டாள். அவள் கோபப் படாமல் பேசியது கண்டு ராமப்பா சற்று துணிவு கொண்டு "நான் இந் நாட்டு இளவரசிக்கு ஒரு வீணை செய்து கொடுக்க வேண்டும். அதற்காகத் தான் இதை வெட்ட நினைத்தேன்" என்றான்.

யட்சிணியும் சிரித்தவாறே "பூ! இவ்வளவுதானா? நான் உனக்கு ஒரு அபூர்வ வீணை கொடுக்கிறேன். அதைக் கொண்டு போய் அரசகுமாரியிடம் கொடு" என்று சொல்லித் தன் கையை நீட்டினாள். மறு விநாடியே அவ ளது கையில் ஒரு அழகிய வீணை இருந்தது.

அதுகண்டு ராமப்பா ஆச்சரி யப்பட்டு நின்றான். அப்போது யட்சிணி "இது சாதாரண வீணை அல்ல. அபூர்வ வீணை. வீணை வாசிக்கத் தெரியாதவர்கள் கூட இதில் வாசிக்கலாம். இதன் முன் அமர்ந்து சரஸ்வதி தேவியை நினைத்து கொண்டு தனக்குத் தெரிந்த பாட்டை எண்ணி இதன் கம்பிகளைத் தொட்டால் போதும். உடனே அதை இந்த வீணை இசைக்கும்" என்றாள்.

ராமப்பாவும் திகைத்துப் போய் "ஓகோ! அப்படியா!" என ஆச் சரியத்துடன் கூறவே யட்சிணியும் "எல்லா ராகங்களையும் இதில் கேட்டு இன்புறலாம். மோகன ராகத்தையும் அமிர்தவர்ஷிணி ராகத்தையும் மட்டும் வாசிப்ப

தற்கு முன் நன்கு யோசித்துக் கொள்ள வேண்டும். முதலாவது கூறிய ராகத்தை நினைத்து இதைத் தொட்டால் அவன் மனம் விரும்பும் பெண்ணை மணந்து கொள்வான். மற்ற ராகத்தை நினைத்து இதைத் தொட்டால் ஒரே மழையாகப் பெய்யும். இன்னொரு விஷயம். இந்த மரமும் நானும் இங்கே இருக்கும்வரைதான் இந்த வீணைக்கு இந்த அரிய சக்தி இருக்கும். இதை நினைவில் வைத்துக்கொள்" என்று கூறி அந்த வீணையை ராமப்பாவிடம் கொடுத்தாள். ராமப்பா அதை வாங்கிக் கொண்டதும் யட்சிணி மாயமாய் மறைந்து போனாள்.

திடீரென அரிய சக்தி வாய்ந்த ஒரு வீணை தனக்குக் கிடைத்ததால் ராமப்பா ஒரேயடியாக மகிழ்ந்து போனான். அவன் மனம் அந்த வீணையைக் கொண்டு இளவரசி சந்திரிகாவை மணந்து கொண்டு விட வேண்டும் என்று எண்ணியது.

ராமப்பாவும் தன்னோடு வந்தவனிடம் "வா போகலாம். ஆனால் இங்கு நடந்ததை நீ வேறு யாரிடமும் சொல்லக் கூடாது. தெரிந்ததா" என்றான். அந்த ஆளும் யாரிடமும் சொல்வதில்லை என்று கூறினான்.

ஆனால் ஊருக்குப் போனதும் அவன் தன் மனைவியிடம் காட்டில் ராமப்பாவுக்குக் கிடைத்த





அதிசய வீணை பற்றக் கூறினான். அவள் உடனேயே அந்த விஷயத்தை ஊர்முழுவதும் பரப்பி விட்டாள்.

மறுநாள் காலை ராமப்பா தூங்கி எழுந்து தன் வீட்டு வாசலுக்கு வந்தபோது அங்கு ஊரார்கூடி நிற்பதைக் கண்டு ஆச்சரியப் பட்டான். ஆனால் மறு விநாடியே அவனுக்கு விஷயம் புரிந்து விட்டது. கூட்டத்தவரும் அவனிடம் காட்டில் அவன் பெற்ற அதிசய வீணையை ஒருமுறை வாசித்துக் காட்டும்படி வேண்டினார்கள்.

ராமப்பா சற்றுத் தயங்கினான். அப்போது மாய மந்திரங்களில் நம்பிக்கை இல்லாத ஒரு வாலிபன் "உன் வீணையை வாசித்தால் நீ விரும்பிய பெண்ணை மணந்து கொள்ள முடியுமாமே! உனக்கு நல்ல அதிர்ஷ்டம் தான். நீ அரசகுமாரியை நினைத்துக் கொண்டு வீணையை வாசி. அவளைக் கல்யாணம் செய்து கொண்டு வாழ்நாள் முழுவதும் சுகமாக இருக்கலாம்" என்று கேலியாகக் கூறினான்.

அதைக் கேட்ட ராமப்பா ஆத்திரம் அடைந்தான். அவன் உடனே "நீ அந்த அதிசய வீணைக்கு எந்த சக்தியும் இல்லை என்றா நினைக்கிறாய்? இதோ பார். வாசித்துக் காட்டி அதற்கு உள்ள அற்புத சக்தியை நிரூபிக்கிறேன்" எனக் கூறி வீட்டினுள்ளே போய் வீணையை எடுத்து வந்தான்.

அவன் திண்ணையில் உட்கார்ந்து சரஸ்வதி தேவியை தியானித்து வீணையைத் தொட்டான். ஆனால் அவசரத்தில் அவன் மோகனராகத்திற்கு பதிலாக அமிர்தவர்ஷிணி ராகத்தை நினைத்து விட்டான். அதனால் அவன் மனதில் அரசகுமாரியை அடைய வேண்டும் என நினைத்த போதிலும் பயனில்லாமல் போயிற்று. மாறாக திடீரென இடியும் மின்னலும் தோன்றி மழை கொட்டலாயிற்று.

மழையிலிருந்து தப்ப அங்கு கூடிய மக்கள் ஓட்டம் பிடித்தார்கள். அப்போது தான் ராமப்

பாவுக்குத் தான் தவறான ராகத்தை நினைத்தது தெரிந்தது. ஆனால் தெரிந்து என்ன பயன்? மழையோ விடாமல் பெய்து கொண்டே இருந்தது.

அப்போது திடீரென மின்னல் வெட்டி ஒரு பேரிடி மலைப் பகுதியில் விழுந்த சத்தம் கேட்டது. மறு நிமிடம் ராமப்பாவின் கையில் வீணைக்கு பதிலாக ஒரு பாம்புதான் இருந்தது. அது கண்டு அவன் அலறி அதனைத் தூக்கி எறிந்தான். அது சீறியவாறே உயரக் கிளம்பி ஆகாயத்தில் சென்று மறைந்து விட்டது.

தன்மகன் போட்ட கூச்சலைக் கேட்டு ராமப்பாவின் தந்தை சஞ்சீவி வாசலுக்கு ஓடி வந்தான். அவன் என்ன நடந்தது எனக் கேட்க ராமப்பாவும் எல்லாவற்றையும் விவரமாகக் கூறினான். அதைக் கேட்ட சஞ்சீவி ''மகனே! நீ நம் தொழிலுக்கே களங்கத்தை ஏற்படுத்திவிட்டாய். இது உனக்கு நல்ல பாடத்தைக் கற்றுக் கொடுத்திருக்கிறது. வீண் ஆசைப் பட்டால் மக்கள் மத்தியில் அவமானப் படத்தான் வேண்டிவரும். சரி. இப்போதே காட்டிற்குப் போய் வேறு நல்ல மரமாகப் பார்த்து அறுத்து எடுத்து வா: அதைக் கொண்டு வீணை செய்து அரசகுமாரிக்குக் கொண்டு போய்க் கொடு'' என்றான்.

மரம் வெட்டிக் கொண்டு வர மலைக்குப் போன ராமப்பா அங்கு யட்சிணி வசித்து வந்த மரம் இடி விழுந்து கருகிப் போனதைக் கண்டான். அதன்பின் அவன் நல்ல மரமாகத் தேடி வெட்டி எடுத்து ஊருக்கு வந்தான். அவன் நல்லதொரு வீணை செய்து அதை எடுத்துக் கொண்டு அரண்மனைக்கு போய் அரசகுமாரியிடம் கொடுத்துவிட்டு ஊர் திரும்பினான்.



# சூரப்புலி!

மகத நாட்டின் மீது படை எடுத்த அங்க நாடு படுதோல்வியை அடைந்தது. மகத வீரர்கள் மன்னனால் கௌரவிக்கப்பட்டனர். அந்த வீரர்கள் தம் ஊர்களுக்குச் செல்லவே அங்கும் அந்தந்த ஊரார் அவர்களை வரவேற்று கௌரவித்தார்கள்.

பலவீரன் என்ற வீரன் தன் ஊருக்குச் சென்றபோது அவன் ஆயிரம் எதிரிப் படைவீரர்களை வெட்டியவன் எனக் கேள்விப்பட்டு ஊரார் அவனை வரவேற்று கௌரவித்தார்கள். ஒருபொதுக் கூட்டமும் நடந்தது. அப்போது ஒருவன் பல வீரனைப் பார்த்து "நீங்கள் ஆயிரம் வீரர்களின் கைகளையும், கால்களையும் மட்டுமே வெட்டினீர்களாமே. ஏன். அவர்களது தலைகளை வெட்டவில்லை?" என்று கேட்டான்.

பலவீரனும் "ஏனென்றால் எனக்கு முன்பே யாரோ அவர்களது தலைகளை வெட்டிப் போட்டிருந்தார்கள். அதனால் எனக்கு அந்த வாய்ப்பு கிட்டவில்லை. அதனால் தான் அவர்களது கை, கால்களை வெட்டினேன்" என்றான்.





# அதிசய மலர்

## 11

*[உத்தமன் ராட்சஸ மிருகத்தை அடக்கப் போகும்போது அவனுக்கு உதவ படைத் தலைவன் நாகசிம்மனையும் சில வீரர்களையும் அவனோடு அனுப்ப நாகபுர மன்னன் ஏற்பாடு செய்தான். எல்லைப் பகுதியிலிருந்து வந்த நாகசிம்மன் உத்தமனுக்கு அறிமுகப்படுத்தப்பட்டான். திடீரென அதிசய மலர்கள் காணாமல் போகவே அதுபற்றி மன்னனிடம் கூறக் காயம்பு வந்தான். அப்போது—]*

சேனாதிபதி காயம்புவிடம் "உன்னிடம் அதிசய மலர் இருப்பது பற்றி உத்தமன்தான் நாகசிம்மனிடம் கூறினான். வேறு யாருக்கும் அந்த மலர்கள் உன்னிடம் இருப்பது தெரியாதே. அவன் அவற்றை எடுத்திருந்தாலும்கூட அவனுக்கு அவற்றால் என்ன பயன்? இதனால் உத்தமனின் பயணம்தான் சற்றுத் தடைப்படும்" என்றான்.

காயம்புவும் "நீங்கள் சொல்வது யோசிக்கத்தக்கதே. நாம் ஒரு முடிவுக்கு வரும்வரை இங்கேயே இருக்கிறேன்" எனக் கூறி விடைபெற்றுக் கொண்டு உத்தமன் தங்கி இருந்த விடுதிக்குச் சென்றான். இருவரும் அதிசய மலர் பற்றி வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மறுநாள் மத்தியானம் ஒரு வீரன்



காயம்புவிடம் வந்து "உங்களைக் காண இரு பெண்கள் வந்திருக் கிறார்கள்" என்றான். காயாம்பு வும் விடுதியின் வாசலுக்கு வரவே அங்கு தன் மகள் இருப்பது கண்டு "ஆ! சித்ராவா!! நீ இங்கே இப் போது ஏன் வந்தாய்? அங்கு எல்லோரும் நலம் தானே" என்று கேட்டான்.

அவளும் "நலமே! ஒரு நற் செய்தி. காணாமல் போன அதி சய மலர்கள் கிடைத்துவிட்டன. நாங்கள் அவற்றைத் தேடிக் கடற் கரைப் பக்கமாகப் போனபோது உத்தமனின் படகு கவிழ்க்கப் பட்டிருக்கவே அதைத் தூக்கிப் பார்த்தோம். அதனடியே மலர் கள் இருந்தன. ஒருவேளை உத் தமனே தான் புறப்பட முன் கூட் டியே இதைச் செய்தாரோ என்று எண்ணினோம்" என்றுக் கூறிக் கொண்டிருக்கும்போதே உத்தம னும் அங்கு வந்துவிட்டான்.

அப்போது காயாம்பு "இல்லை. அவன் நேற்றிரவு முழுவதும் இங்குதான் இருந்தான். எங்கும் போகவில்லை. அதுசரி. இப்போது அந்த மலர்கள் எங்கே இருக்கின் றன?" என்று கேட்டான். சித்ரா வும் "அதே இடத்தில்தான் உள் ளன. இதைத் தெரிவிக்கவே நாங்கள் ஓடோடி வந்தோம்" என் றாள்.

காயாம்புவும் "ரொம்ப சந் தோஷம். நீங்கள் இங்கேயே இருங்கள். நானும் உத்தமனும் இப்போதே போய் சேனாதிபதி யைக் கண்டு இதனைக் கூறிவிட்டு வருகிறோம்" என்று கூறி உத்த மனை அழைத்துக் கொண்டு கிளம்பினான். போகும் வழியில் உத்தமன் "அதிசய மலர்கள் கிடைத்துவிட்டன என்றா சித்ரா சொன்னாள்?" என்று கேட் டான்.

காயாம்புவும் "ஆமாம். அவை கடற்கரையில் உன் படகின் கீழ் மறைத்து வைக்கப்பட்டிருந்தன வாம்" என்றான். அதுகேட்டு உத் தமன் "ஓ! அவற்றை என் படகில் கொண்டுபோய் யார் வைத்திருப்



பான்? அவன் என் படகில் அவற்றோடு போய்விட முயன்றானோ? ஒரு வேளை நாகசிம்மன் தான் இதைச் செய்திருப்பானோ? அப்படியானால் அவன் நோக்கம் தான் என்ன?'' என்று கேட்டான்.

காயாம்புவும் "என்னவோ? யார் கண்டார்கள்? நாம் சேனாதிபதியைக் கண்டு விஷயத்தைக் கூறுவோம்'' எனக் கூறினான். சற்று நேரத்தில் இருவரும் சேனாதிபதியின் மாளிகையை அடைந்து அவனைக் கண்டார்கள்.

காயாம்பு மலர் கிடைத்துவிட்டது எனவே சேனாதிபதியும் "இந்த நற்செய்தியைக் கொண்டு வந்த வீரன் யார்?'' என்று கேட்டான். காயாம்புவும் "எந்த வீரனும் இதைக் கண்டுபிடித்து வரவில்லை. என் மகள் சித்ரா தான் இதைக் கூறினாள்'' என்று முழு விவரங்களையும் அளித்தான்.

அப்போது சேனாதிபதி "முதல் வேலையாக அம்மலர்களைப் பாதுகாக்கச் சில வீரர்களை கடற்கரைக்குக் காவல் காக்க அனுப்புகிறேன். இப்போதே இந்த நற் செய்தியை மன்னரிடம் கூற வேண்டும், வா'' என்றான்.

அவன் சில வீர்களைக் கூப்பிட்டுக் கடற்கரைக்குப் போய் அதிசய மலர்களைப் பாதுகாக்கும்படிக் கட்டளை இட்டுவிட்டு காயாம்புவையும் உத்தமனையும் அழைத்துக் கொண்டு மன்னனைக் காணச் சென்றான்.

மன்னனும் சேனாதிபதி கூறியதைக் கேட்டு மகிழ்ந்தவனாய் "அந்த மலர்கள் கிடைத்துவிட்டதால் இனித் தாமதிக்கக் கூடாது. உத்தமன் இனிக் கிளம்பிவிட வேண்டும்'' என்றான். உத்தமனும் "நான் இப்போதே கிளம்பத் தயாராக இருக்கிறேன்'' என்றான்.

மன்னனும் "சபாஷ்! நீதான் சுத்த வீரன் நீ உன் பயணத்தை வெற்றிகரமாக முடித்தபின் முதலில் இங்கு வந்துவிட்டுப் பிறகு உன் நாட்டிற்குப் போகலாம்''

என்றான். பிறகு சேனாதிபதியிடம் "இன்றே உத்தமன் புறப்பட ஏற்பாடுகளைச் செய். நான் போய் மல்லிகாவிடம் இந்த நற்செய்தியைக் கூறுகிறேன்" என்று கூறி அவர்களை அனுப்பிவிட்டுத் தன் மகள் இருக்கும் இடத்திற்குச் சென்றான்.

தன் இருப்பிடத்தை அடைந்த சேனாதிபதி உடனே நாகசிம்மனை அழைத்துவரச் சொன்னான். நாகசிம்மன் வந்தபோது சேனாதிபதியும் உத்தமனும் காயாம்புவும் ஒன்றாக இருந்தது கண்டு திடுக்கிட்டுப் போனான். அவன் மறு நிமிடம் தன்னைச் சமாளித்துக் கொண்டு சேனாதிபதியை வணங்கினான்.

சேனாதிபதியும் "நீ இன்றே சில வீரர்களுடன் உத்தமனோடு செல்ல வேண்டும். இது மன்னரின் கட்டளை" என்றான். நாகசிம்மனும் "இன்றே போக வேண்டுமா? அதிசய மலர்கள் கிடைத்துவிட்டனவா?" என்று கேட்டான். சேனாதிபதியோ "மலர் கிடைத்தால் என்ன, கிடைக்காவிட்டால் என்ன? நீ கட்டளைப்படி நட" என்று கண்டிப்பான குரலில் சொன்னான். அப்போது நாகசிம்மன் "நாங்கள் மலர்களை எடுத்துக் கொண்டுதானே செல்ல வேண்டும் என்பது ஏற்பாடு" எனக் கேட்டான்.



சேனாதிபதியும் "ஆமாம். மலர்களை ராட்சஸ மிருகம் இருக்கும் இடத்தில் சேர்க்க வேண்டும். இன்று மாலை நீங்கள் கடற்கரையை அடைந்துவிட வேண்டும். மலர்களோடு ஒரு படகு முன் செல்ல அதன்பின் இரு படகுகளில் வீர்கள் வருவார்கள். மற்ற ஏற்பாடுகளை உத்தமன் செய்வான்" என்றான்.

நாகசிம்மன் அப்படியே செய்வதாகக் கூறிச் சென்றான். அதன்பின் சேனாதிபதி உத்தமனிடம் "இந்த நாகசிம்மனை நம்பாதே. இவன்தான் மலர்களைத் திருடிக் கடற்கரைக்குக் கொண்டுபோயிருப்பான். ஆனால் ராட்சஸ



மிருகத்தை தன்னால் எதிர்க்க முடியாது என நினைத்துத் திரும்பி வந்திருக்கிறான். அவன் எப்போது என்ன செய்வான் என்று கூற முடியாது. நீ ஜாக்கிரதையாக இரு'' என எச்சரித்தான்.

உத்தமனும் தான் எச்சரிக்கையுடன் இருப்பதாகக் கூறவே சேனாதிபதியும் காயாம்புவிடம் ''நீ கடற்கரை வரை உத்தமனோடு சென்று அவனைப் படகில் ஏற்றி அனுப்பிவிட்டு வா'' என்றான். காயாம்புவும் அவ்விதமே செய்வதாகக் கூறி உத்தமன் தங்கி இருந்த விடுதிக்குச் சென்றான். அங்கே அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சித்ராவிடம் உத்தமன் பயணம் பற்றிக் கூறினான்.

சற்று நேரமானதும் படைத் தலைவன் நாகசிம்மன் அங்கு வந்தான். யாவரும் கடற்கரைக்குச் சென்றனர். நாகசிம்மன் யாரிடமும் எதுவும் பேசாமல் ஏதோ யோசித்தவாறே சென்று கொண்டிருந்தான்.

கடற்கரையில் மூன்று படகுகள் இருந்தன. வீரர்களும் இருந்தார்கள். ஒரு படகில் அதிசய மலர்கள் ஏற்றப்பட்டிருந்தன. அது உத்தமன் வந்த படகே. உத்தமன் தன் மடியில் கட்டி வைத்திருந்த அதிசய மலர் பூக்கும் செடிகளின் நாற்றுகளை எடுத்து சித்ராவிடம் கொடுத்து அவற்றை நட்டு வளர்க்கச் சொன்னான்.

நாகசிம்மன் உத்தமனைப் பார்த்து ''எல்லாம் தயாராக இருக்கிறதே. இனித் தாமதியாமல் புறப்பட வேண்டியது தானே'' என்றான். காயாம்புவும் உத்தமனிடம் ''இருட்டுவதற்கு முன் புறப்படுவது நல்லது. நான் சொன்னது நினைவில் இருக்கட்டும். உங்கள் வருகையை எதிர்பார்த்துக் கொண்டே இருப்போம்'' என்றான்.

உத்தமன் அவனை வணங்கி விட்டுத் தன் படகிற்குச் சென்றான். நாகசிம்மன் முன்னதாகவே போய் அந்தப் படகில் உட்கார்ந்திருந்தான். உத்தமன் ஏறிய படகை முதலில் வீரர்கள் கடலில்



தள்ள உத்தமன் துடுப்பு வலித்து அதனைச் செலுத்தலானான். அதற்குப் பின் வீரர்கள் ஏறிய இரு படகுகள் வரலாயின. படகுகளை அலைகள் ஆட்டி அசைத்துக் கொண்டு செல்லலாயின.

மாலை மங்கி இரவின் இருள் படரலாயிற்று படகுகள் வேகமாகச் சென்று கொண்டே இருந்தன. உத்தமன் உற்சாகத்துடன் படகை வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தான். அப்போது நாகசிம்மன் கரகரத்த குரலில் "இந்த மலர்களைக் கொண்டுபோய் ராட்சஸ மிருகத்திடம் கொடுத்துவிட்டால் அது மாணிக்கபுரியைத் தாக்காது என்பது உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான்.

சற்று மரியாதைக் குறைவாகப் பேசிய நாகசிம்மனை உத்தமன் உற்றுப் பார்த்து "இந்த மலர்களால் கவரப்பட்டே ராட்சஸ மிருகம் மாணிக்கபுரிக்கு வந்தது. இப்போது அந்நாட்டில் ஒரு அதிசய மலர்கூட இல்லை. எல்லாவற்றையும் பறித்துக் கட்டுகளாக்கி நான் கொண்டு வந்துவிட்டேன். இனி நூறு வருடங்களுக்குப் பிறகே அவை மலரும். எனவே அதுவரை ராட்சஸ மிருக பயம் இல்லை" என்றான்.

அப்போது நாகசிம்மன் "அப்படியானால் இந்த மலர்களை வைத்துக் கொண்டு ராட்சஸ மிருகத்திடம் பேரம் பேசலாம். அல்லவா?" என்று கேட்டான். உத்தமனும் "பேரமா? எதற்கு? எப்படிப் பேசுவது? நாம் சொல்வதை அது புரிந்து கொள்ளுமா? அல்லது அது சொல்வதை நம்மால் தான் புரிந்து கொள்ள முடியுமா? நீ ஏதாவது பேரமா செய்யப் போகிறாய்? இதுபற்றிய கவலையை விடு" என்றான்.

நாகசிம்மனும் "பேரம் பேசத்தான் போகிறேன். ஏனெனில் நாகபுர மன்னன் ராணி, இளவரசி ஆகிய மூவரையும் ஒழித்துவிட்டு நான் அந்நாட்டின் மன்னனாக வேண்டும். அதற்கு ராட்சஸ மிருகத்தின் உதவியை நாடப்

போகிறேன் எனக்கு இந்த மலர்கள் பேரம் பேச உதவும்.'' என்றான். உத்தமன் இதைக் கேட்டு ஆச்சரியம் அடையவில்லை. நாகசிம்மனைப் பற்றித்தான் ஏற்கனவே மல்லிகா கூறி இருந்தாளே!

நாகசிம்மனோ "நான் நாகபுர நாட்டின் மன்னனாக வேண்டும். அதைத் தடுக்க யார் முயன்றாலும் அவர்களை ஒழித்துவிடுவேன். அது அரசனாக இருந்தால் என்ன? நீயாக இருந்தால் என்ன. எவரையும் விட்டு வைக்கமாட்டேன்.'' என்றான்.

அப்போது உத்தமன் "நான் மாணிக்கபுரியிலிருந்து கொண்டு வந்த மலர்களை உன் கெட்ட எண்ணம் நிறைவேறுவதற்குப் பயன்படுத்தப் போவதை அனுமதிக்க மாட்டேன். உன்னைத் தடுக்கத் தான் போகிறேன்'' என்று கண்டிப்பாகக் கூறினான்.

நாகசிம்மனோ பலமாகச் சிரித்து "உன் அனுமதியா? நீயா என்னைத் தடுப்பாய்? நீ உயிரோடு இருந்தால்தானே அதுபற்றி யோசிக்க வேண்டும்?'' என்று கூறியவாறே உத்தமனைப் படகிலிருந்து கடலுக்குள் தள்ளிவிட்டான். உத்தமன் நீரில் மூழ்கிப் போனான். வெகு நேரமாகியும் அவன் நீர் மட்டத்திற்கு மேல் வரவில்லை.

உத்தமன் கடலுக்கு இரையாகி விட்டான் என எண்ணி அப்படகிலிருந்த மலர்களை வீரர்கள் இருந்த படகில் வைத்துக் கொண்டு நாகசிம்மன் செல்லலானான். உத்தமனின் படகை அப்படியே விட்டு விட்டான்.

கடலில் தள்ளப்பட்ட உத்தமன் வெகுநேரம் நீந்தியவாறே பார்த்த போது ஒரு படகு ஆடி அசைந்து கொண்டு வருவதைக் கண்டான். அதில் யாரும் இல்லை என்பதையும் கண்டு அவன் அதில் ஏறிக் கொண்டு அதைச் செலுத்தலானான்.

(தொடரும்)






# இயல்பு மாறுமா!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங் கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்தப் பயங்கர நடு நிசியில் நீ இப்படி விடாப்பிடி யாக ஒரு செயலில் இறங்கி இருப் பது எதற்கோ? உனக்காகவா அல்லது பிறருக்காகவா? சில சம யங்களில் பிறருக்காகச் செய்யப் படும் செயல் அவர்களால் மதிக் கப்படாமல் கூடப் போவதும் உண்டு. இதனை விளக்க வில்வ நாதன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்." என்று கூறிக் கதையை ஆரம்பித் தது.

விசாலூர் என்ற கிராமத்தில்

## வேதாளம் சொல்லும் கதை



வில்வநாதன் என்ற பணக்கார விவசாயி இருந்தான். அவன் எப்போதும் தன்னைச் சுற்றிப் பத்து பேர்களை உட்கார வைத்துக் கொண்டு அவர்களுக்கு ஏதாவது அறிவுரைகளைக் கூறிக் கொண்டே இருப்பான். ஆனால் யாருக்கும் எந்த உதவியும் செய்து விட மாட்டான்.

அவன் அடிக்கடி "பிறருக்குத் தீங்கு செய்வது எவ்வளவு தப்போ அவ்வளவு பிறருக்கு உதவுவதும் தப்பு. ஒருவன் தான் வாழத் தன் காலிலேயேதான் நிற்க வேண்டும். பிறரை எதிர்பார்க்கக் கூடாது. அப்போதுதான் உலகம் உருப்படும்." எனக் கூறி வந்தான்.

இதைக் கேட்டு வந்த அவ்வூராரும் பிறருக்கு உதவுவது என்பதை நாளடைவில் மறந்தே போனார்கள்.

ஒரு நாள் அந்த ஊருக்கு ஒரு மகான் வந்தார். அவர் "மனிதன் பிறருக்காக வாழ வேண்டும். அதில் தான் அவனுக்கு இகலோகத்தில் உயர்வும் சுகமும் கிடைக்கும். பரலோகத்தில் மோட்சம் கிட்டும்" என்று எல்லோம் மனதிலும் நன்கு பதிய வைத்துவிட்டுச் சென்றார். அவர் கூறியபடி அந்த ஊரார் பிறருக்கு உதவத் தொடங்கினார்கள்.

அந்த ஊரில் வீராசாமி என்ற இளைஞன் இருந்தான். சிறுவனாக இருந்தபோது அவன் வீடு இடிந்து விழுந்ததால் அவனது தாய், தந்தையர் இறந்து போனார்கள். அவனது காலில் பலத்த அடி பட்டு எந்த வேலையும் செய்ய முடியாமல் போயிற்று. அவன் பிச்சை எடுத்து கிடைத்ததைச் சாப்பிட்டு மிகவும் கஷ்டப்பட்டு நாட்களைக் கழித்து வந்தான். அதைக் கண்ட அவனது தூரத்து உறவினன் தர்மலிங்கம் அவனைத் தன் வீட்டில் வைத்துக் கொள்ளலாமா என்று கேட்க வில்வதாதனிடம் வந்தான்.

வில்வநாதனும் "நீ மட்டும் வீராசாமியை உன் வீட்டில் வைத்துக் கொண்டு சாப்பாடு போட்

டால் அவன் முழுச் சோம்பேறியாக ஆகிவிடுவான். அவனுக்குக் கைகள் உள்ளன. என்னிடம் அனுப்பு. ஏதாவது சிறு தொழில் செய்து சம்பாதிக்க அவனுக்கு வழி செய்கிறேன். அவனைத் தன் சொந்த சம்பாத்தியத்தில் வாழ விட்டு விடு'' என்றான்.

தர்மலிங்கம் அது சரியே என நினைத்து வீராசாமியை வில்வநாதனிடம் ஒப்படைத்தான். வில்வநாதன் அவனைக் கூடை முடையவும் பாய்கள் தயாரிக்கவும் சொல்லி அவற்றிற்கு வேண்டிய மூங்கில் கோரை முதலியவற்றை வாங்கிக் கொடுத்தான். அவன் முடைந்த கூடைகளையும் பாய்களையும் நல்ல லாபத்தில் விற்றுப் பணம் சம்பாதித்துக் கொண்டான். ஆனால் வீராசாமிக்கு இரண்டு வேளை சாப்பாடுதான் கிடைத்தது. முதலில் அவனுக்கு சாப்பாடு போடத் தயங்கிய வில்வநாதனின் மனைவி ''இவனுக்கு இரண்டு வேளை சாப்பாடு போடுவதால் வீண் செலவுதானே! இவனை வீட்டில் வைத்துக் கொள்ள வேண்டாம். அனுப்பிவிடுங்கள்'' என்றாள்.

ஆனால் வில்வநாதனோ ''அட பைத்தியமே. இவனுக்கு நாம் செலவிடும் பணத்தைவிட இவன் முடைந்து கொடுக்கும் பாய்களாலும் கூடைகளாலும் நமக்கு நிறையப் பணம் கிடைக்கிறது. அதனால் அவனை வீட்டைவிட்டு





அனுப்பினால் நமக்குத்தான் நஷ்டம்'' என்றான். வீராசாமியால் தன் கணவனுக்குப் பணம் கிடைப்பது கண்டு அவள் அவனுக்குச் சாப்பாடு போட்டு வந்தாள்.

அந்த ஊரில் பெருமாள் கோவில் கட்ட வேண்டும் என ரகுராமன் என்பவர் எண்ணினார். அவர் அதுபற்றி வில்வநாதனிடம் கூறினார். வில்வநாதனோ ''இப்போது இந்த ஊரில் ஒரு கோவில் இருக்கிறது. அதன் தர்ம கர்த்தா நான்தான். அது சற்றுப் பழுதடைந்து இருப்பதால் அதைப் புதுப்பித்துவிடலாம். எல்லாக் கடவுளும் ஒன்றுதானே. நீ கோவில் கட்ட நினைக்கும் பணத்தை என்னிடம் கொடு. இருக்கும் கோவிலைச் சீர்படுத்திவிடலாம்'' என்றான்.

ரகுராமன் வில்வநாதன் கூறியது கேட்டு ''நீங்கள் கூறுவது சரிதான். நான் பெருமாள் கோவில் கட்டலாம் என நினைத்தேன். ஆனால் நீங்கள் எல்லாக் கடவுளும் ஒன்றே எனக் கூறியதும் என் மனம் மாறிவிட்டது. நீங்கள் தர்மகர்த்தாவாக உள்ள கோவிலைப் புதுப்பிப்பதே சரி'' எனக் கூறி தான் கோவில் கட்ட வைத்திருந்த இருபத்தையாயிரம் ரூபாயை அவனிடம் கொடுத்தான். வில்வநாதன் மேலும் பலரிடம் கோவில் திருப்பணிக்காக நன்கொடை வேறு வசூலித்துவிட்டான். கோவிலைப் புதுப்பிக்கப் பணம் செலவு செய்யப்பட்டது. கணக்குப் பார்த்ததில் வில்வநாதன் தனக்கு நிறைய ஆதாயம் என கண்டு மகிழ்ந்தான்.

சேனாபதி என்பவன் அவ் வூர் பள்ளிக் குழந்தைகளுக்கு இலவசமாய் மதிய உணவு கொடுக்க முன்வந்தான். வில்வநாதன் அவனிடம் ''நீ உன் பணத்தைக் கொடு. பள்ளியைச் சுற்றி காலி இடம் நிறைய உள்ளது. அதில் காய்கறிப் பயிர் செய்து விற்று நல்ல உணவாக அளிக்கிறேன்'' என்றான். சேனாபதியும் வில்வநாதன் கூறியதை ஏற்றுப் பணத்தை

அவனிடம் கொடுத்தான். வில்வநாதன் மதிய உணவளிக்கும் பொறுப்பை ஏற்று பள்ளியைச் சுற்றி காய்கறித் தோட்டம் போட்டு அவற்றை விற்று அதிலும் லாபம் அடைந்தான். இப்படியாக அந்த ஊராரை வில்வநாதன் தன் கைப் பொம்மைபோல ஆட்டி வந்தான். கோவில் தர்மகர்த்தா அவனே. பள்ளி நிர்வாகியும் அவனே! அதனால் அவன் வைத்ததே சட்டம்!

ஒருநாள் மணலூரிலிருந்து விசாலூருக்கு பொன்னம்பலம் என்பவன் வந்தான். அவன் அவ்வூர்ப் பிரமுகர்களிடம் ''எனக்கு ஏராளமாகப் பணம் உள்ளது. நான் அதை ஏழைகளுக்குக் கொடுத்து அவர்களது வாழ்க்கையைச் சீர்திருத்தி உயர்த்தி வருகிறேன். இவ்வாறு பல ஊர்களில் செய்துவிட்டு இங்கு வந்திருக்கிறேன். இவ்வூரிலுள்ள ஏழை மக்களைக் கூட்டுங்கள். அவர்களும் நிலம் வாங்கிக் கொடுத்து விவசாயம் செய்யச் சொல்கிறேன்'' என்றான்.

பிரமுகர்கள் உடனே வில்வநாதனுக்குத் தகவல் கொடுத்தனர். வில்வநாதனோ ''நம் ஊரில் ஏழைகளே இல்லை. எல்லோரும் உழைத்துப் பிழைப்பவர்கள் எனவே இந்தப் பொன்னம்பலத்தின் பணம் தேவை இல்லை. அவன் தன் பணத்தைக் கொடுப்பதானால் அரசாங்கத்திற்குக் கொடுக்கட்



டும். அரசாங்கம் மக்களுக்குச் செலவிடும்'' என்றான்.

பொன்னம்பலம் வில்வநாதனைப் பற்றித் தெரிந்து கொண்டு அவனிடம் தன் பணத்தைக் கொடுக்கலானான். ஆனால் வில்வநாதனோ "இதை நான் வாங்க மாட்டேன். இது எந்த வகையில் சம்பாதிக்கப்பட்டதோ எனக்குத் தெரியாது. நான் எதையும் யாரிடமிருந்தும் தானமாகப் பெற்றுக் கொள்ள மாட்டேன்." என மறுத்து விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி மன்னர் வில்வநாதன் கோவில், பள்ளி எனக் கூறித் தனக்குப் பணம் சேர்த்துக் கொண்டான். ஆனால் பொன்னம்பலம் நிறையப் பணம் கொடுக்க வந்தபோது அதை ஏற்க ஏன் மறுத்தான்? திடீரென சுயநலம் அவனை விட்டுப் போய் நல்ல புத்தி அவனுக்கு வந்துவிட்டதா? இக்கேள்விகளுக்கு பதில் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் "வில்வநாதன் பொன்னம்பலத்தின் பணம் வேண்டாம் என்று கூறியதால் அவனுக்கு நற்புத்தி வந்துவிட்டதாகக் கொள்ள முடியாது. அவன் தனக்கு ஆதாயம் இல்லாமல் எந்த வேலையையும் செய்ததில்லை. அவன் பிறரை நற்காரியங்கள் செய்யவிடாமல் தடுத்து வந்தான். பொன்னம்பலத்தின் பணத்தால் தனக்கு எந்த லாபமும் இல்லை என்று கண்டு அதை ஏற்க மறுத்து அப்பணத்தால் அவன் நற்செயல்கள் செய்துவிடக்கூடாது என்ற நோக்கத்திலே பணத்தை அரசாங்கத்திற்குக் கொடுக்கும்படிக் கூறினான். எனவே அவனது இயல்பு மாறவில்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப்போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# புரியாத புதிர்

கந்தப்பன் தானிய வியாபாரி. தன் கிராமத்தில் விளைந்த தானியத்தை வாங்கி பட்டணத்திற்கு கொண்டு போய் விற்றுவந்தான். அவனது ஒரே மகன் சண்முகம். கந்தப்பன் தன் மகனுக்குத் தன் தொழிலில் பயிற்சி அளிக்க நினைத்தான்.

ஒரு நாள் கந்தப்பன் சண்முகனை அழைத்து "பொன்னூரில் பொன்னப்பன் தன்னிடமுள்ள தானியத்தை விற்கப் போகிறானாம். நீ அங்கு போய் தானியங்கள் நன்றாக இருக்கிறதா என்று பார்த்து வா. அதன் பிறகு நீயும் நானும் போய் விலைபேசி வாங்கி வரலாம்" என்றான்.

சண்முகமும் சரி எனக் கூறி காலையில் பொன்னூருக்குக் கிளம்பிச் சென்றவன் இருட்டிய பிறகுதான் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். கந்தப்பன் அவனிடம் "இதோ இருக்கும் பொன்னூருக்குப் போய்வர இவ்வளவு நேரமா?" என்று கேட்டான்.

சண்முகமும் அலுத்துக் கொண்டே "தானியத்தை நன்கு பார்க்கச் சொன்னாயா? அங்கே நூறு மூட்டைகள் இருந்தன. ஒவ்வொரு மூட்டையாகப் பிரித்து கொஞ்சம் தானியம் எடுத்து நசுக்கிப் பார்த்தேன். தானியம் நன்றாகத்தான் இருக்கிறது" என்றான்.

அதைக்கேட்டு கந்தப்பன் சிரித்து "அட முட்டாளே. ஒரு பானை சோறு வெந்திருக்கிறதா என்று பார்க்க ஒரு பருக்கையை எடுத்து நசுக்கிப் பார்த்தால் போதும். எல்லாவற்றையுமா நசுக்கிக் கொண்டிருப்பார்கள்! அது போலத்தான் எல்லாவற்றிலும் பார்க்க வேண்டும். தெரிந்ததா?" என்றான்.

—சி. வெங்கடாசலம்—

மறுநாள் காலையில் கந்தப்பன் ஏதோ ஒரு வேலையாக அடுத்த ஊருக்குச் சென்றிருந்த போது நாகப்பன் என்ற வியாபாரி வந்தான். அவன் தான் கந்தப்பனுக்கு இருபதாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும் என்று கூறி ஆயிரம் ரூபாய் பைகளாகக் கொடுத்தான். சண்முகம் அவற்றில் ஓரிண்டு பைகளை எடுத்து எண்ணிப் பார்த்து விட்டு எல்லாம் சரியாக இருக்கிறது என்று கூறி அனுப்பி விட்டான்.

மாலையில் கந்தப்பன் வந்ததும் சண்முகம் தான் நாகப்பனிடமிருந்து பணம் வாங்கி வைத்துள்ளதைக் கூறினான். அதுகேட்டுக் கந்தப்பன் "அவன் ஏமாற்றுப் பேர்வழி. கொடுத்த பைகள் ஒவ்வொன்றையும் சரியாக எண்ணிப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

சண்முகமும் "இல்லை. முன்பு நீங்கள் சொன்னபடி ஏதோ கைக்குக் கிடைத்த இரண்டு பைகளில் எண்ணிப் பார்த்தேன். அவற்றில் சரியாக ஆயிரம் ரூபாய்கள் இருந்தன. அதுபோலத் தானே மற்றவற்றிலும் இருக்கும்?" என்றான்.

கந்தப்பனோ சந்தேகப்பட்டு எல்லாப் பைகளையும் எடுத்து எண்ணிப் பார்த்தான். இரண்டாயிரம் ரூபாய் குறைந்திருந்தது. கந்தப்பனும் "என்னடா இது நீ எண்ணிப் பார்த்த லட்சணம்" என்று உறுமினான்.

அதைக் கேட்ட சண்முகம் "என்னப்பா இது! அன்று நீங்கள் ஏதோ ஒன்றிரண்டு சரியாக இருந்தால் போதும், எல்லாவற்றையும் பார்க்கத் தேவை இல்லை என்றீர்கள். இன்றோ எல்லாவற்றையும் ஏன் எண்ணவில்லை என்று கோபித்துக் கொள்கிறீர்கள். இது என்ன வியாபார வித்தையோ! புரியாத புதிராக இருக்கிறது? என்று கூறி நின்றான்.



# அம்புலிமாமா அனுபந்தம்—64

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## அரிய வெண்புலி



ரீவா சமஸ்தானத்தில் நடந்த புலி வேட்டை பற்றிய கதை யாவருக்கும் ஆவல் மூட்டக் கூடியதே. நாற்பது ஆண்டுகளுக்கு முன் 1951 மே 26ல் நடந்த ஒரு நிகழ்ச்சி உண்மையானதே. ரீவா மன்னர் சில விருந்தாளிகள் காண ஒரு புலி வேட்டைக்கு ஏற்பாடு செய்திருந்தார். அப்போது ஒரு புலி தன் நான்கு குட்டிகளுடன் வருவதை வேட்டைகாரர்கள் கண்டார்கள். தாய் புலியும் மூன்று குட்டிகளும் துப்பாக்கி குண்டுகளுக்கு இரையாகின. ஒரு புலிக் குட்டி மட்டும் தப்பி ஓடியது. அதன் நிறம் வெள்ளை. மறுநாள் வேட்டைக் காரர்கள் அதனைத் தேடிப் பிடித்து கோவிந்தகட் மாளிகைக்குக் கொண்டு வந்தார்கள். மறுபடியும் அது தப்பி ஓடி மறுநாள் மீண்டும் பிடிபட்டது. ஒன்பது மாதமான அப்புலிக் குட்டிக்கு மோகன் என்று பெயர் இட்டார்கள். அதற்கும் 'பேகம்' என்ற பெண்புலிக் கும் பத்துப் புலிக் குட்டிகள் பிறந்தன. அவற்றில் ஒன்றுகூட வெள்ளையாக இல்லை. 'மோகனுக்கும் மற்றொரு சாதாரணப் புலிக்கும் நான்கு புலிக்குட்டிகள் பிறந்தன. அவை நான்கும் வெள்ளை நிறத்தவை. இது 1958 அக்டோபர் 30ல் நடந்தது.

'மோகன்' என்ற வெண்புலிதான் நம் நாட்டில் வெண்புலிகள் தோன்றக் காரணமாக இருந்தது. 1990 கணக்குப்படி நம் நாட்டு விலங்குகள் அருங்காட்சி அகங்கள் 10ல் 16 ஆண் வெண்புலிகளும் 20 பெண் பெண்புலிகளும் உள்ளன. அயல்நாட்டு அருங்காட்சி அகங்களில் 133 வெண்புலிகள் உள்ளன.

இவற்றின் உடலில் கறு நிற கோடுகள் இருக்கும். கழுத்து, தாடைகள் வயிற்றின் அடிபாகம் வெள்ளையாக இருக்கும். கண்கள் நீல நிறம். இவை பற்றி முதல் முதலாக அபுல்பசல் தான் 1561ல் தாம் எழுதிய அக்பர் நாமாவில் குறிப்பிட்டிருக்கிறார்.




## ராம் கிங்கர்



கவியரசர் தாகூர் நிறுவிய விஸ்வ பாரதி பல்கலைக் கழகத்தில் கலைத் துறையின் தலைமைப் பொறுப்பை ஏற்றவர் பிரபல ஓவியர் நந்தலால் போஸ். அவரிடம் 1925ல் ஒரு சிறுவனை அழைத்து வந்தார்கள். அவன் பெயர் ராம்கிங்கர்.

"நீ வரைந்த படங்கள் இருந்தால் காட்டு" என்று போஸ் கூறவே அச்சிறுவனும் கசங்கிப் போன ஒரு நோட்டை எடுத்துக் கொடுத்தான். போஸ் அதில் வரையப்பட்ட படங்களைக் கண்டு புன்முறுவல் பூத்துத் தன் மாணவனாக அவனைச் சேர்த்துக் கொண்டார்.



ராம்கிங்கரை நந்தலாலிடம் அனுப்பியவர் 'மாடர்ன் ரெவ்யூ' என்ற பத்திரிகையின் ஆசிரியர் ராமானந்த சாட்டர்ஜீ. அவர் ராம்கிங்கரின் திறமையில் நம்பிக்கை கொண்டே அவனை போஸிடம் அனுப்பினார். அவரது நம்பிக்கை வீண்போகவில்லை. ராம்கிங்கர் தன் கற்பனையைக் காட்டி ஓவியங்களாக்கித் தன் ஆசிரியர்களின் மதிப்பையும் நண்பர்களின் பாராட்டுதல்களையும் பெற்றுவிட்டான்.

ராம்கிங்கர் மேற்கத்திய பாணியையும் கிழக்கத்திய பாணியையும் ஓவியங்

களில் எவ்வாறு பயன்படுத்து கிறார்கள் என்பதை உன்னிப் பாகக் கவனித்தார். அதன் பின் அவர் தனக்கென ஒரு பாணியை வகுத்துக் கொண்டு அதில் முன்னேறலானார். இந் திய முறையை அதிகமாய் கையாண்டு புதிய உத்திக ளைப் புகுத்தி மற்றவர்களுக்கு வழிகாட்டியாக விளங்கி னார்.



தான் காண்பதை உள்ளது உள்ளபடியே வரையாமல் அதி லுள்ள சிறப்பான அம்சம் எதுவோ அதை வலியுறுத்தும் வகையில் அவர் ஓவியங்களை வரைந்து வந்தார். ஒரு அறி ஞரை அவர் சித்தரித்தால் அவரது உடலின் அளவிற்கு ஏற்ற தலையை வரையாமல் தலையைப் பெரிதாக வரைந்து காட்டுவார்.

ராம் கிங்கரின் ஓவியங்கள் சக்தி வாய்ந்தவை. உயிருள் ளவைபோல உணர்த்துபவை இயற்கைக் காட்சிகள். பறவை கள் மிருகங்கள் மனிதர்கள், விசித்திர உயிரினங்கள் ஆகியவற்றை சித்தரித்தார். இவர் உருவாக்கிய இரு யட்சர்களின் புதுமைகள் இன்றும் புதுடில்லியில் ரிசர்வ் வங்கிக் கட்டடத்தின் எதிரே உள்ளன.

ராம்கிங்கர் எளிய வாழ்க்கையை மேற்கொண்டவர். அவரது மாணவர் களும், ரசிகர்களும், விமர்சகர்களும் அவரைப் பலவிதத்திலும் பாராட்டி கௌர வித்தபோதிலும் அவர் சற்றும் கர்வம் கொள்ளாது இருந்து வந்தார்.

விஸ்வபாரதி பல்கலைக் கழகம் 1976ல் அவருக்குச் சிறப்பு விருது அளித்து கௌரவித்தது. பலதுறைகளைச் சார்ந்த பிரமுகர்கள் அவரை வாழ்த்தி னார்கள். 1980ல் அவர் தமது 80வது வயதில் இயற்கை எய்தினார்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. நம் நாட்டிற்கு சுதந்திரம் அளிக்க பிரிட்டன் முடிவு செய்தபோது நம் நாட்டின் வைஸ்ராயாக இருந்தவர் யார்?
2. உலகில் எந்த நாடு மிக அதிகமாய்ச் சர்க்கரையை உற்பத்தி செய்கிறது.?
3. காளிதாசர் காலத்தில் இருந்த மன்னர் யார்?
4. 'லீரா' எந்த நாட்டு நாணயம்?
5. 'புத்தசரித்திர'த்தை எழுதியவர் யார்?
6. 'சேப்டிபின்'னைக் கண்டுபிடித்தவர் யார்?
7. நம் நாட்டில் காடுகள் மிகுந்த மாநிலம் எது?
8. 'ரோஜாப் பள்ளத்தாக்கு' எந்நாட்டில் உள்ளது?
9. நம் நாட்டில் ஏரியின் நடுவே உள்ள தேசியப் பூங்கா எது?
10. உலகில் மிகப் பெரிய பாலைவனம் எது?
11. நம் நாட்டில் 'ரேஷன்' முறை எப்போது புகுத்தப்பட்டது?
12. ஜய சங்கர் பிரசாதின் புகழ்பெற்ற நூல் எது?
13. உலகில் மிகக் கடும் குளிர் காலம் எந்நாட்டில் ஏற்படுகிறது?
14. காந்திஜீ தென்னாப்பிரிக்காவிலிருந்து நம் நாட்டிற்கு எந்த ஆண்டில் திரும்பி வந்தார்?
15. இந்தோனேசியக் குடியரசை நிறுவியர் யார்?
16. 'மொஹஞ்சதாரோ' என்பதன் பொருள் என்ன?
17. 'மிளகு, கிராம்பு முதலியவற்றை அதிகமாகப் பயிர் செய்யும் மாநிலம் எது?
18. 'விம்பிள்டன் சேம்பியன் ஷிப்' எப்போது துவங்கியது?
19. நம் நாட்டின் 'செஸ்' சாம்பியன் யார்?
20. 'வந்தே மாதரம்' பாடலை இயற்றியவர் யார்?

## விடைகள்

1. லார்ட்வேல்
2. க்யூபா
3. சந்திரகுப்தவிக்கிரமாத்தித்தியர்
4. இத்தாலி
5. அஸ்வகோஷர்
6. வால்டர்ஹெண்ட்
7. அருணாசல பிரதேஷ்
8. பல்கேரியா
9. மணிப்புரியின் மதுப்பூர் தேசியப் பூங்கா
10. வடஆப்பிரிக்காவிலுள்ள சஹாரா
11. 1943 வங்காளப் பஞ்சத்தின்போது
12. காமாயனி
13. வடகிழக்கு சைபீரியா
14. 1915ல்
15. சுகர்னோ
16. இறந்தவர் மேடு
17. கேரளம்
18. 1887ல்
19. விஸ்வநாதன் ஆனந்த்
20. பங்கிம் சந்திர சாட்டர்ஜி



# முகமூடி ஆள்!

கண்டனூர் குப்புசாமிக்குக் கல்யாணம் நடந்தது. அவன் தன் மனைவி மங்கம்மாவை வாடகை வண்டியில் ஏற்றிக் கொண்டு தன் மாமனாரின் ஊரிலிருந்து தன் ஊருக்கு வந்து கொண்டிருந்தான். வழியில் ஒரு ஆற்றின் கரை ஓரம் வண்டியை நிறுத்தி அவன் கீழே இறங்கினான். சற்று தூரத்தில் பழங்கால ஓட்டு வீடு ஒன்று இருந்தது. அதைச் சுற்றியுள்ள காய்கறித் தோட்டத்தில் இருவர் காய்களைப் பறித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சித்திரக் குள்ள தம்பதிகள்.

அவர்களைப் பார்த்துவிட்டுப் புன்னகை புரிந்தவாறே குப்புசாமி வண்டியில் ஏறி உட்கார்ந்தான். அதை கவனித்த மங்கம்மா "ஏன் அவர்களைப் பார்த்துச் சிரித்தீர்கள்?" என்று கேட்டாள்.

குப்புசாமியும் "அதற்கு ஒரு காரணம் இருக்கிறது. சொல்கிறேன் கேள்" என்று கூறி விவரிக்கலானான்.

"நான்கு மாதங்களுக்கு முன் நான் இவ்வழியில் வந்தபோது இந்த ஆற்றில் வெள்ளம் வந்து விட்டது. அப்போது இருட்டி மழை வேறு பெய்ய ஆரம்பித்தது. நான் அந்த ஓட்டு வீட்டிற்குப் போய்க் கதவைத் தட்டினேன். ஒரு சித்திரக் குள்ளப் பெண் கதவைத் திறந்தவாறு "யாரது? என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

நானும் "வெள்ளம் வந்ததால் அக்கரைக்குப் போக முடியவில்லை. இன்றிரவு இங்கே தங்கிப் போகலாமா?" என்று கேட்டேன். "ஓ! தாராளமாக! என்று கூறிக் கொண்டே ஒரு சித்திரக் குள்ளன் வந்தான். அவன் அந்த

—சு. சோபினி—



வீட்டுக்காரன்.

அவர்கள் என்னை வற்புறுத்தி தங்களோடு சாப்பிடச் சொன்னார்கள். பேச்சு வாக்கில் சித்திரக்குள்ளனின் மனைவி "என் தம்பி தம்பித்துரை இன்று வர வேண்டுமே. இதுவரை வரவில்லையே" என்று கூறிக் கொஞ்சம் உணவை ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்தாள்.

முன் அறையில் நான் படுத்துக் கொண்டேன். அவர்கள் உள் அறையில் படுத்துக் கொண்டார்கள். சற்று நேரத்திற்குப் பின் யாரோ வாசல் கதவைத் தட்டவே நான் யார் என்று கேட்டவாறே எழுந்து போய்க் கதவைத் திறந்தேன்.

எதிரே மூகமூடி அணிந்த ஒருவன் கையில் கத்தியுடன் நின்று கொண்டிருந்தான். இதற்குள் "என் தம்பியா வந்துவிட்டான்?" என்று கேட்டுக் கொண்டே வந்த சித்திரக்குள்ளப் பெண் அங்கிருந்த முகமூடி ஆளைப் பார்த்து 'ஆ'வென அலறினாள்.

இதற்குள் மூகமூடி மனிதன் கத்தியை அந்தப் பெண்ணின் கழுத்தில் வைத்து என்னைப் பார்த்து "நீ மட்டும் என்னைப் பிடிக்க முயன்றால் இவளைக் கொன்றுவிடுவேன்" என்று மிரட்டினான். அதன்பின் அவளைக் கொண்டே வீட்டிலுள்ள நகைகளையும் பணத்தையும் எடுத்துக் கொண்டு என் மோதிரத்தையும் பணப்பையையும் பறித்துக் கொண்டான். பிறகு அவன் வெளியே போய் வாசல் கதவை முன்புறம் தாளிட்டுவிட்டுப் போய்விட்டான்.

அத் தம்பதிகளின் சொத்து திருட்டுப் போனது கண்டு நான் மிகவும் மனம் வருந்தினேன். நான் முன்பின் யோசியாமல் கதவை திறந்ததால்தானே திருடன் வீட்டினுள் வந்தான்! நான் திறக்காது இருந்திருந்தால் அவர்களுக்கு இந்த நஷ்டம் ஏற்பட்டிராதே என்று எண்ணினேன்.

நான் அத் தம்பதிகளிடம் மன்னிப்புக் கேட்கப் போனேன்.

அவர்களோ "ஐயோ! உங்களால் எங்கள் உயிர் தப்பியது. நீங்கள் மட்டும் அவசரப்பட்டு அவனைப் பிடிக்க முயன்றிருந்தால் அவன் எங்கள் இருவரையும் கொன்றிருப்பான்" என்றார்கள்.

மறுநாள் காலை, நான் அங்கிருந்து என் ஊருக்கு வந்தேன். நான் என் தாயாரிடம் நடந்ததைக் கூறவே அவளும் மனம் இளகி அத்தம்பதிகளுக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கச் சொன்னாள். நானும் பணத்தோடு கிளம்பிச் சென்றேன்.

நான் அவர்களது வீட்டை அடையும்போது இருட்டிவிட்டது. ஆனால் இருட்டில் அங்கு முன் கண்ட முகமூடித் திருடன் இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டு நான் ஒரு மரத்தின் பின் மறைந்து நின்றேன். சற்று நேரத்திற்குப் பின் சித்திரக்குள்ளப் பெண் அவனைக் காண வந்தாள். அவனிடம் ஏதோ ரகசியம் பேசிவிட்டு அவள் வீட்டினுள் சென்றாள்.

எனக்கு எல்லாம் புரிந்து விட்டது. அந்த முகமூடி மனிதன் அவர்களுடைய கையாள் என்றும் அந்த வீட்டுக்கு வரும் பயணிகளை ஏமாற்றிப் பணம் பிடுங்குகிறார்கள் என்றும் புரிந்து கொண்டேன்.

மறுநிமிடமே நான் ஓடி வாசல் கதவை தட்டப் போன முகமூடி மனிதனின் கழுத்தில் ஓங்கி ஒரு குத்து விட்டேன். அவன் மயங்கி விழுந்தான். அவனது முகமூடியை எடுத்து நான் அணிந்து கொண்டு கத்தியை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டு கதவை தட்டி "தம்பித்துரை வந்திருக்கிறேன்" என்றேன்.



அறுபது வயதான ஒரு கிழவர் வந்து கதவைத் திறந்து "தம்பித்துரையா நீ? உன் அக்கா உன்னைத்தான் எதிர்பார்த்தக் கொண்டிருக்கிறாள்" என்றார். ஆனால் என் வேஷத்தைக் கண்டு பயந்து நடுங்கிக் கீழே விழுந்துவிட்டார்.

அன்றிரவு அந்த வீட்டில் தங்க வந்த பயணி அவர். இதற்குள்

சித்திரக் குள்ளப் பெண் ஓடி வந்து "தம்பித்துரையா வந்தான்?" என்று கேட்டாள்.

நான் சட்டெனக் கத்தியை அவள் கழுத்தின் மீது வைத்து "எங்கே உன் கணவன்?" என்று கேட்கவே அவள் மிரளமிரள விழித்தாள். நான் அவளைக் கொண்டே வீட்டிலுள்ள பணம், நகைகளை எடுத்துவைக்கச் செய்தேன். பிறகு அவளை ஒரு அறையில் தள்ளித்தாளிட்டேன்.

பிறகு நான் ஒரு கடிதம் எழுதி "குள்ள தம்பதிகளே! உங்கள் புத்தி சின்னப் புத்தி. திருட்டுத் தொழில் மகா மோசமானது. திருடன் என்று ஒருவன் ஒருமுறை பெயர் வாங்கிவிட்டால் அது அழியவே அழியாது. பயணிகளை ஏமாற்றிப் பணம் பறிக்கும் உங்களை என்னால் அரசாங்கத்திடம் பிடித்துக் கொடுத்துவிட முடியும். உங்களுக்குத் திருந்த ஒரு வாய்ப்பு அளிக்கிறேன். உங்கள் வீட்டைச் சுற்றியுள்ள இடத்தில் காய்கறிகளைப் பயிர் செய்து அவற்றை விற்றுப் பணம் பெற்று கௌரவமாக வாழுங்கள். உங்கள் வீட்டில் கிடைத்ததை எல்லாம் ஒரு அனாதை ஆசிரமத்திற்குக் கொடுக்கப் போகிறேன்" என்று முடித்து அதை வெளியில் கிடந்த ஆளின் சட்டைப் பையில் வைத்துவிட்டு வந்தேன்."

இதை அவன் தன் மனைவியிடம் கூறி "இப்போது அவர்கள் திருந்திவிட்டார்கள். காய்கறி விற்றுப் பிழைக்கிறார்கள். அதனால் திருப்திப்பட்டே நான் புன்னகை புரிந்தேன்" என்றான்.

அவன் மனைவியும் "உங்களுக்கு அறிவோடு துணிச்சலும் உள்ளது. அவர்களை நீங்கள் திருத்தியதோடு நல்வழிப்படுத்திவிட்டீர்கள்" எனப் பாராட்டினாள்.



# அம்புலிமாமா செய்திகள்

## கம்ப்யூடர் குளிப்பு!



குளிப்பதற்குக் கூட கம்ப்யூடர் வரப் போவதை விரைவில் காணலாம். 'பாத் ரோபோ' என்ற கம்ப்யூடரை ஜப்பானில் உருவாக்கி இருக்கி றார்கள். நீங்கள். 1.6 மீட்டர் உயரமுள்ள தொட்டிக்குள் உட்கார்ந்து விட்டால் போதும். உங்கள் மீது வெந்நீரை கொட்டும். அப்போது நீங் கள் கண்களை மூடிக் கொண்டுவிட வேண்டும். ஏனெனில் அடுத்து சோப்பு கரைந்த நீர் உங்கள் மீது விழும். அதன்பின் வெந்நீர்த் திவலைகள் தெளிக்கப்பட்டு முடிவில் குளிர்ந்த காற்று ஊதப்படும். இதனால் உங்கள் உடல் ஈரம் உலர்ந்துவிடும். உங்களுக்கு முதுகுத் தேய்த்துக் கொள்ளும் அவசியமே இல்லை. அதுவும் இந்தக் குளியலிலேயே முடிந்துவிடுகிறது. ஜப்பானில் ஐந்து நிறுவனங்கள் சேர்ந்து இந்த 'பாத் ரோபா' கம்ப்யூட்டரை உருவாக்கி இருக்கிறார்கள். இதன் விலை யைக் கேட்டால் மலைத்துப் போவீர்கள். அதிகம் இல்லை. பதிநான்கு லட்சரூபாய்கள் தான்!

## இங்கிலிஷ் கால்வாயில் மனை



இங்கிலீஷ் கால்வாயில் 19 ஆவது நூற்றாண்டில் நாட்டைப் பாதுகாக்கக் கட்டப்பட்ட ஒரு கோட்டை இப்போது சொகுசு பல மாடிக் கட்டடமாக ஆகிறது! இந்தக் கோட்டை பிரஞ்சுக் காரர்கள் தாக்குதலைச் சமாளிக்கக் கட்டப்பட்டது. ஐம்பது பீரங்கிகளோடு 400 வீரர்களும் அங்கு இருந்து வந்த னர். இக் கோட்டையைக் குடியிருப்பு மாளிகையாக்க அறுபத்தைந்து லட்சம் அமெரிக்க டாலர்களுக்கு விற்கப்பட்டது. அதில் கலங்கரை விளக்கமும் ஹெலி காப்டர் இறங்க வசதியும் உண்டு.




# என்ன வித்தியாசம்?

ஒரு யோகி பல ஊர்களுக்குப் போகும் வழியில் முத்தூரில் ஒரு மரத்தடியே தங்கினார். அவர் மக்களுக்கு தினமும் உபதேசம் செய்து வந்தார். அவருக்கு அக்கிராமத்தவர் முறை போட்டுக் கொண்டு தினமும் உணவளித்து வந்தார்கள்.

ஒருநாள் அவர் ராமய்யன் என்பவனின் வீட்டில் உணவு அருந்திக் கொண்டிருந்தார். அப்போது குருசாமி என்பவன் வந்து "ராமய்யா நாளைக்குள் உங்கள் கடனை நான் தீர்க்க வேண்டும். ஆனால் பணம் கிடைக்கவில்லை. இன்னும் ஒரு மாதத்தில் தீர்த்துவிடுகிறேன்." என்றான்.

ராமய்யனோ கோபத்தோடு "நீ சொன்ன சொல் காக்கவில்லை. உனக்குக் கடன் கொடுத்ததே தப்பு" எனக் கூறிப் பலவாறு திட்டி அனுப்பினான். அதைக் கண்ட யோகி ராமய்யனிடம் "அப்பனே! கோபம் கெடுதலை விளைவிப்பது. அதை அடக்க வேண்டும். நீ இப்போது அவனைத் திட்டியதால் உன் பணம் கிடைத்தா விட்டது?" என்றார்.

ராமய்யனும் சாதுவைப் பணிவுடன் வணங்கி "ஐயா! நான் திட்டினால் யாரும் வருந்தமாட்டார்கள். என் கோபம் திட்டிய மறுகணமே மறைந்துவிடும். அதனால் இப்படித் திட்டி உடனே மறந்தும்விடுகிறேன்." என்றான்.

அப்போது யோகி ராமய்யனைப் பாராட்டி "கோபம் நொடியில் மறைவது என்றால் அது ப்ராராட்டப்பட வேண்டியதே" எனக் கூறிக் கொண்டிருக்கும்போது ராமய்யனின் நண்பன் சீனப்பன் வந்தான்.

—பாபநாசம் சாமா—

அவன் யோகியைப் பார்த்த வாறே "ஒரு வேலையும் செய்யா மல் பிறர் தயவில் வாழும் சோம் பேறிகளைப் பார்க்கவே எனக்குப் பிடிக்காது. நீ இப்படிப்பட்டவர் களுக்கு உணவளிப்பதும் சரி யல்ல" என்றான். இதுகேட்டு ராமய்யன் மனம் புழுங்கியவனாய் யோகியைத் தேற்ற "ஒவ்வொரு வனும் ஏதாவது ஒன்றைச் சொல் லிக் கொண்டுதான் இருப்பான். இதற்காக அவனைக் குறை கூற முடியாது" என்றான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் யோகியைக் காண அவர் அமர்ந்திருக்கும் இடத்திற்குச் சென் றான். அப்போது அங்கு வேலு சாமியைக் கண்டான். அவனைக் கண்டதும் ராமய்யன் அவன் கையைப் பற்றிக் கொண்டு "ஆ! அகப்பட்டுக் கொண்டாயா? இன்று நீயா நானா என்று இரண்டில் ஒன்று முடிவாக வேண்டும்" என் றான்.

யோகி இடைமறித்து "கொஞ்சம் பொறு. என்ன நடந்தது என்று விவரமாகச் சொல்" என்றார். ராமய்யாவும் "போன மாதம் நான் பக்தி சிரத்தையுடன் கோவிலில் பூஜை செய்து கொண்டிருந்தேன். அப்போது அங்கே இருந்த வேலுசாமியோ அக்கிரமங்களை அதிகமாகச் செய்பவனெல்லாம் கடவுள் பக்தனாகிவிடுகிறான் என்று கூறிவிட்டு ஓடிப் போய் விட்டான். அங்கிருந்தவர்கள் எல்



லாம் என்னைப் பார்த்து கேலியா கச் சிரித்தார்கள். எனக்கு அவமான மாகப் போய்விட்டது" என்றான்.

யோகி வேலுசாமியைக் கடிந்து கொண்டு "பிறர் மனம் புண்படப் பேசுவது கூடாது" என்று அறிவுரை கூறினார். அப்போது சீனப்பன் வந்து "சுவாமி! யோகிகளின் அருமை பெருமைகளை அறியாமல் அன்று உங்களைக் கண்டபடி பேசிவிட்டேன். என்னை மன்னியுங்கள்" என்று வணங்கினான்.

யோகியும் புன்னகை புரிந்தவாறே "மன்னிக்கும்படியாக அப்படி என்ன குற்றம் நீ செய்து விட்டாய்? உனக்கு ஏதாவது பிரச்னை இருந்தால் சொல். நான் உதவுகிறேன்" என்றார் அவனும் "என் மனைவிக்கு துஷ்ட கிரக பலத்தால் ஏதோ ஒரு வியாதி பிடித்திருக்கிறது. அதை தாங்கள்தாம் போக்க வேண்டும்" என்றான்.

யோகி சீனப்பனுடன் அவன் வீட்டிற்குச் சென்றார். அவர் மந்திரங்களைக் கூறி அவனது மனைவியை ஆசீர்வதித்தார். மறுநாள் அவள் குணமடைந்துவிட்டாள். அது கண்ட ராமய்யன் யோகியிடம் "சுவாமி! இந்த சீனப்பன் தங்களை வாய்க்கு வந்தபடி ஏசினானே. அவனுக்குப்போய் உதவி இருக்கிறீர்களே. இது ஏனோ?" என்று கேட்டான்.

யோகியும் "நானும் உன் போன்றவனே. நீ பிறரைக் கோபித்துக் கொண்டு உடனே மறந்தும் போகிறாய். நான் யார் என்னைக் கோபித்துக் கொண்டாலும் உடனே மறந்தும் போய்விடுவேன். நான் கோபம் கொண்டு ஒருவனை ஏதாவது கூறிவிட்டால் அது அவனது வாழ்க்கையையே பாதித்து விடும்" என்று கூறினார்.

ஒரு யோகிக்கும் ஒரு சாதாரண மனிதனுக்கும் என்ன வித்தியாசம் என்பது அப்போது ராமய்யனுக் குப் புரிந்தது. அவனும் கோபம் கொள்வதை விட்டொழித்தான்.






இராமரது தர்பாரில் யார் வேண்டுமானாலும் தங்குதடை இல்லாமல் போய் நியாயம் கேட்கலாம். உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற பாகுபாடு கிடையாது. ஒருநாள் இராமரது அரண்மனை முன் நாய் ஒன்று நின்று பலமாகக் குரைத்தது. அதன் உடலில் பலத்த காயம் ஏற்பட்டு ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது.

இராமர் வெளியே வந்து அந்த நாயின் தலையைத் தடவினார். அப்போது அதன் காயம் மறைந்தது. அதுவும் "அரசே! என்னை ஒரு இளைஞன் ஈவிரக்கம் இல்லாமல் அடித்துவிட்டான். அவன் வேலை எதுவும் இல்லாமல் திரிந்து கொண்டிருக்கிறான். அவனை ஒரு பெரிய கோவிலின் தர்மகர்த்தாவாக ஆக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்" என்றது.

அதுகேட்டு இராமர் ஆச்சரியப்பட்டு "உன்னை அடித்தவனுக்குக் கடும் தண்டனை விதிக்க வேண்டும் என்று கேளாமல் அவனுக்கு தர்மகர்த்தா பதவி கொடுக்கச் சொல்கிறாயே! இது ஆச்சரியமாக இருக்கிறது" என்றார்.

அந்த நாயும் "முன் பிறப்பில் நான் ஒரு பெரிய கோவிலின் தர்மகர்த்தாவாக இருந்து அதன் சொத்துக்களை எல்லாம் எனதாக்கிக் கொண்டு பல அக்கிரமங்களைச் செய்ததால் இந்தப் பிறப்



பில் நாயாகப் பிறந்தேன். இந்த இளைஞனும் என்னைப் போல நாயாகப் பிறந்து கஷ்டப்பட வேண்டும் என்பதற்காகத்தான் அவனை கோவில் தர்மகர்த்தா வாக நியமிக்கும்படி வேண்டி னேன். கோவில் தர்மகர்த்தா ஆகிவிட்டால் பண ஆசை வந்து விடும். இதனால் அவனை நான் பழி வாங்குகிறேன். இராமரே! உங்களது திருக்கரம் பட்டதால் நான் மோட்சத்திற்குப் போகி றேன்.'' எனக் கூறித் தன் உயிரை விட்டது.

நாயை அடித்துத் துன்புறுத்திய அந்த இளைஞனுக்கு நடந்தது எல்லாம் தெரிந்தது. அதனால் அவன் மனம் மாறி நல்லவனாக ஆகிவிட்டான்.

அசுவமேத யாகம் முடிந்தபின் இராமரது ஆட்சி நன்கு நடந்து கொண்டிருந்தது. அப்போது எம தர்மராஜன் பிராமணர் வடிவில் வந்து இராமரிடம் "இராமா! உங்களிடம் இரகசியமாகப் பேச வேண்டும். நாம் பேசும்போது யார் வந்து குறுக்கிட்டாலும் அவன் தலையை வெட்டிவிட வேண்டும்'' என்றான். இராமரும் அதற்கு இணங்கி இலட்சுமணனைக் கூப் பிட்டு "நாங்கள் இருவரும் பேசி முடிக்கும்வரை யாரையும் என் அறைக்குள் விட்டுவிடாதே. அப் படி யாராவது வந்தால் அவன் தலை வெட்டி எறியப்படும். இதை நினைவில் வைத்துக் கொள்'' என்று கூறி அனுப்பினார்.

அப்போது எமன் "இராமரே! நீங்கள் மகாவிஷ்ணு. நீங்கள் அவ தாரம் எடுத்ததன் நோக்கம் நிறை வேறிவிட்டது. எனவே வைகுண்ட லோகத்திற்கு உங்கள் தம்பிக ளுடன் திரும்பிச் செல்லுங்கள்'' என்றான்.

இதே சமயம் துர்வாச முனிவர் வந்து இலட்சுமணனிடம் "நான் இப்போதே இராமரைக் காண வேண்டும்'' எனவே இலட்சுமண னும் "சற்றுப் பொறுங்கள்'' என வேண்டினான். ஆனால் துர்வா சரோ "நான் அவரை இப்போதே

காண வேண்டும். இது நடக்கா விட்டால் உங்கள் வம்சமே அழிந்து போகும்படிச் சபித்துவிடுவேன்'' என்று மிரட்டினார்.

இலட்சுமணன் துர்வாசரின் விருப்பத்தை இராமரிடம் உடனே தெரிவிக்க அவரும் எமனும் பேசிக் கொண்டிருந்த அறைக்குள் நுழைந் தான். மறு நிமிடமே எமன் மறைந்து போனான்.

இராமர் தான் எமனுக்குக் கொடுத்த வாக்கின்படி இலட்சு மணனின் தலையை வெட்டும்படிக் கட்டளை இட்டார்.

பிரமுகர்கள் பலர் அத்தண் டனை கடுமையானது என இராமரி டம் கூறிக் கொண்டிருக்கும் போதே இராமரை இக்கட்டான நிலையில் வைக்க விரும்பாமல் இலட்சுமணன் சரயு நதியில் மூழ் கித் தன் உயிரை மாய்த்துக் கொண்டு ஆதிசேஷனாகி வைகுண்ட லோகத்தை அடைந்தான்.

அதன்பின் இராமர் பரதனிட மும் சத்துருக்கனனிடமும் விஷயத்தை விளக்கி லவகுசர்களின் பட்டாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னார். அவர்களும் அவ்வாறே செய்ய இராமர் லவ குசர்களுக்குப் பட்டாபிஷேகம் நடத்தினார். பிறகு அவர் அனுமா ரைக் கூப்பிட்டு ''இனிமேல் நீங் கள் தாம் லவகுசர்களைப் பார்த் துக் கொள்ள வேண்டும். நாட் டிற்கு எவ்வித் ஆபத்தும் வராமல் காக்க வேண்டும். இவர்கள் நன்கு





ஆட்சி புரிகிறார்கள் என்று பாராட்டும்படி நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும்'' என்றார்.

இராமர் சரயு நதிக்கு ஊர்வலமாக சென்றார். வாத்தியங்கள் முழங்க, வேதமந்திரங்கள் ஒலிக்க அவர் சரயு நதிக்கு நடந்தே சென்றார். பரதன் வெண்குடை பிடிக்கச் சத்துருக்கனன் வெண்சாமரம் வீச மக்கள் மலர் மாரி பொழிய இராமர் முன் செல்ல அனுமார் அவர் பின்னால் சென்றார். இராமர் ஏன் அவ்வாறு சரயு நதிக்குச் செல்கிறார் என்பது யாருக்கும் புரியவில்லை.

யாவரும் சரயு நதிக்கரையை அடைந்தார்கள். இராமர் அதில் இறங்க, பரதன் சங்கநாதம் செய்து கொண்டும் சத்துருக்கனன் இராமர் பின்னாலேயே சென்றும் சரயு நதிக்குள் இறங்கினார்கள்.

இராமர் நதிக்குள் சற்று தூரம் நடந்து போய் நின்று கொண்டார். அவர் தம் கையை உயர்த்தி அபயக் கரம் போலக் காட்டி மக்களை ஆசீர்வதித்து ''எல்லோரும் சந்தோஷமாக வீட்டிற்குத் திரும்பிச் செல்லுங்கள்'' எனக் கூறினார். அனுமாரின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த லவனும் குசனும் ஆச்சரியத்துடன் பார்த்து நின்றனர்.

அனுமாரும் ''எம்பிரானே! நீங்கள் இல்லாமல் நான் இருப்பதா? உங்களுக்கு முன் நான் இந்த நதியில் உயிரை விடுகிறேன்'' என்று கூறி நதியில் குதிக்கப் போனார். இராமர் சைகையால் அவரைத் தடுத்து ''அனுமாரே! உமக்கு மரணமே இல்லை. லவ குசர்களைப் பற்றிக் கூறியதை மறந்துவிட்டீரா? நான் சொன்னபடி நடக்க வேண்டாமா? அவர்களை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் செல்லுங்கள்'' என்றார்.

இராமர் சரயு நதிக்குள் மூழ்கி வெளிவரவில்லை. அவரோடு பரதனும் சத்துருக்கனனும் சென்று விட்டார்கள். இராமாவதாரம் முடிந்தது. முன்பே சென்ற லட்சு

மணனான ஆதிசேஷன். பாற்கடலில் காத்திருந்தான். இராமர் வைகுண்டத்தை அடைந்து மகா விஷ்ணுவாக ஆதி சேஷன் மீது சயனிக்க பரதனும் சத்துருக்கனனும் சங்கு, சக்கரமாகி அவரது திருக்கரங்களில் இருந்தனர். சீதையும், லட்சுமியாகி விஷ்ணுவின் பக்கம் வந்து அமர்ந்தாள். இப்படியாக வைகுண்ட லோகம் முன் போலாகியது.

ஒருநாள் லவனும் குசனும் சிம்மாசனத்தின் மீது அமர்ந்து தம் தாய் தந்தையரை நினைத்துக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அனுமார் அவர்களைத் தேற்றி'' ரகுவம்சத்தில் பிறந்த நீங்கள் இப்படிக் கண் கலங்கலாமா? நாட்டை நல்லவிதமாய் ஆண்டு வாருங்கள். நீங்கள் சீதா தேவியையும், இராமரையும் பார்க்க விரும்பினால் என்னிடம் தெரிவியுங்கள். அவர்கள் என் இதயத்தில் இருக்கிறார்கள். இப்போதே பாருங்கள்'' என்று கூறி அவர்களுக்குத் தம் மார்பைப் பிளந்து காட்டினார்.

அதில் ராமரும் சீதையும் இருந்து புன்னகை புரிந்தவாறே தம்மை ஆசீர்வதிப்பதை அவர்கள் கண்டார்கள். அதனால் அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். அவர்கள் நன்கு ஆட்சி புரிந்து கிழக்கே மணிப்புரத்தைத் தலைநகராயும்



மேற்கே மதுராபுரியைக் கோடைத் தன் தலைநகராகவும் ஆக்கிக் கொண்டார்கள்.

அப்போது திடீரென நாட்டிற்கு ஆபத்து வந்தது. கோரகலி என்ற கொடிய அரக்கன் தன் சகாக்களையும், குஷாணர்கள், பாஷாணர்கள் என்ற மலைச் சாதியினர்களையும் அழைத்துக் கொண்டு தாக்குதலை ஆரம்பித்தான். வட மேற்கு திசையிலிருந்து வந்த அவர்கள் மேற்குப் பகுதியைத் தாக்கினார்கள்.

கோரகலியோடு காலகலி என்ற மற்றொரு கொடிய ராட்சஸனும் காலகேயன் என்ற இன்னொரு ராட்சஸனும் சேர்ந்து கொண்டார்



கள். அவர்கள் அந்த நாட்டை கொள்ளையடித்து பொருள்களை எல்லாம் காலகூடத்தீவில் கொண்டு போய்ச் சேர்க்கலானார்.

மக்கள் இந்தக் கொள்ளைக் காரர்களைக் கண்டு பயந்து ஓடி விட்டார்கள். அனுமார் அவர்களுக்கு ஆறுதல் கூறி அவர்களை அழைத்து வந்து ராமசேனை என்ற படையை அமைத்தார். அவர்களுக்குப் பயிற்சி அளித்து எதிரிகளைத் தாக்கி விரட்டி அடிக்கச் செய்தார்.

அவர் மக்களிடம் ராமசேனை நாட்டில் இருக்கும்வரை ஒற்றுமை குறையாமல் நாட்டைப் பாதுகாத்து மக்களுக்குச் சுக வாழ்வு கொடுக்க முடியும் எனக் கூறி உற்சாக மூட்டினார். கோரகலி, காலகலி, ஆகியோரைத் தாக்க அவர் ஆயிரம் அனுமாராக உருக் கொண்டார். குசன் பயங்கரமாகப் போரிட்டு கோரகலியைக் கொன்றான். லவன் காலகேதுவை எதிர்த்துப் போராடி அவனைக் கொன்றான். காலகேயனும் அவனது சகாக்களும் மக்களின் தாக்குதலைச் சமாளிக்க முடியாது புறமுதுகு காட்டி ஓடிக் கடலில் விழுந்து மடிந்தார்கள்.

இராமர் இல்லாதபோது இவ்வாறு மக்களை ஒன்று திரட்டி லவனுக்கும் குசனுக்கும் உதவி அனுமார் செய்தார். மக்களிடையே சகோதரபாவம் பரவி யாரும் எவருக்கும் எச்சமயத்திலும் உதவி வரலாயினர். அவர்களிடையே நாட்டுப் பற்று மிகுந்து நாட்டைக் காக்கக் கண்ணும் கருத்துமாக இருந்தனர்.

இந்த வெற்றியின் சின்னமாக விளங்க வேண்டும் என்று குசன் தன் பெயரில் குசாவதி என்ற நகரை நிறுவினான். அதுபோல லவனும் தன் பெயரில் லவந்திகா என்ற நகரை நிர்மாணித்தான்.

லவனும் குசனும் வெகு நன்றாக ஆட்சி புரிந்து வந்தார்கள். அவர்களது பராக்கிரமத்திலும் பலத்திலும் அனுமாருக்கு முழு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அவர்கள் ராமராஜ்யம் என்ற நற்

பெயரைக் காப்பாற்றி சீரான ஆட்சியை நாட்டிற்கு அளித்தார்கள். இதனால் அனுமார் திருப்தி அடைந்தார். இனிதான் அவர்களோடு இருக்க வேண்டியதில்லை என்றும் கந்த மாதனப் பர்வத்திற்குப் போய்விட வேண்டும் என்றும் அனுமார் தீர்மானித்துக் கொண்டார்.

அவர் தன் முடிவை லவனிடமும் குசனிடமும் கூறவே அவர்களும் அதற்கு இணங்கி தம் பரிவாரங்களுடன் அவரோடு கந்தமாதன பர்வதம் வரை சென்று அவரை அங்கு விட்டுவிட்டு வந்தார்கள்.

அனுமார் லவனிடமும் குசனிடமும் ரகுவம்சத்தின் பெருமையை நிலைநாட்ட வேண்டும் எனக் கூறி ஆசீர்வதித்து அனுப்பினார். ராம சேனை ஒன்றுபட்டு எப்போதும் இருந்து வந்தால் நாட்டிற்கு எந்த ஆபத்தும் வராது எனக் கூறி அவர் அனுப்பினார்.

லவனோடும் குசனோடும் சென்றவர்களும் அனுமாரை வணங்கி வீர அனுமான் வாழ்க என்று கோஷம் எழுப்பினார்கள். அனுமார் அவர்களுக்கும் தம் ஆசி களை அளித்துவிட்டு கந்தமாதன பர்வத்தின் மீது சென்று அங்கு தவம் செய்யலானார்.

கந்தமாதன பர்வதத்தில் அமர்ந்து அனுமார் தவம் செய்து கொண்டிருந்தபோது திடீரென அவரது தியானம் கலைந்தது. மலைகள் சிறு குவியல்களாயும் மரங்கள் சிறிய செடிகளாயும் தென்பட்டன. யானைகள் எலிகள் போலிருந்தன. அவர் ஆகாயத்தைப் பார்த்த போது சப்த ரிஷி மண்டலம் துருவ நட்சத்திரத்திலிருந்து லிலகிச் சென்றிருப்பதைக் கண்டார்.

அப்போது நாரதர் அங்கு வந்து "இப்போது துவாபர யுகம் வந்துவிட்டது. இதன் நான்காவது பாதத்தில் நீர் இராமபிரானை தரிசிப்பீர்" எனக் கூறிவிட்டுச் சென்றார். அனுமார் மீண்டும் தவத்தில் மூழ்கிவிட்டார்.





# வீர இளைஞன்

வெகு காலத்திற்கு முன் மேற்குக் கடலில் உள்ள லட்சத் தீவுகளில் ஒன்று கேரள நாட்டின் ஆட்சிக்குள் இருந்தது. அதில் பெரும் பகுதி பாறையாக இருந்ததால் விவசாயம் செய்ய முடியவில்லை. அதனால் அத்தீவில் வசிப்பவர்கள் மீன் வியாபாரம் செய்து ஆடு மாடுகளை வளர்த்து வாழ்ந்து வந்தார்கள். அங்குள்ள மீனவர்களில் சிலர் மாலுமிகளாகவும் பணிபுரிந்தனர். சிலர் கடலில் மூழ்கி முத்து எடுத்து வந்தனர். அவற்றை விற்றும் வாழ்ந்து வந்தனர்.

அத்தீவிலிருந்த ஒரு கிழ மீனவனுக்குப் பல மகன்கள் இருந்தனர். அவர்களில் பலர் மீன் பிடிக்கும் தொழிலை மேற் கொண்டனர். ஓரிருவர் கப்பலில் பணி புரிந்தனர். ஆனால் அக்கிழவனின் கடைசி மகனோ மீன்கள் துடிதுடிப்பதைக் காணச் சகியாமல் அவற்றைத் தூக்கி கடலில் எறிந்துவிடுவான். அவன் தந்தையும் சகோதரர்களும் பிடித்து வந்த மீன்களில் ஏதாவது உயிரோடு இருந்தால் அதைக் கடலில் போட்டு விடுவான். இதனால் அவன் வீட்டிற்கு மீன்களைச் சுமந்து வரும்போது சரிபாதி குறைந்தே இருக்கும்.

அவன் மீன் பிடிப்பதில் நாட்டம் கொள்ளாமல் போனாலும் பலரக மீன்களைப் பற்றி ஆர்வம் கொண்டு அவை பற்றிய விவரங்களை அறிந்தும் இருந்தான். அவன் எதுவும் செய்யாமல் கடற்கரையில் உட்கார்ந்து மீன்களையே பார்த்துக் கொண்டே இருந்ததால் அவனை எல்லோரும் உதவாக்கரை என்று கூறலாயினர். அவன் கரையில் உட்கார்ந்

—சிவனார் செல்வன்—



றையெல்லாம் தன் சகோதரர்களிடம் கூறி வரலானான். மூழ்கிய கப்பல்கள், பவளப் பாறைகள், விசித்திர ஜீவராசிகள் தாவரங்கள் என்று தான் கண்டவற்றை எல்லாம் வர்ணித்தான். ஆனால் அவனது சகோதரர்களோ அவன் சொல்வதை நம்பாமல் அவன் பைத்தியம்போல உளறுகிறான் என்று கூறினர். அவனது தாய் அவனுக்கு மந்திர தாயத்தைக் கட்டினாள். ஆனால் அதனால் அவர்கள் விரும்பிய பலன் கிடைக்கவில்லை. அவனது புகழ் நாடெங்கும் பரவியது.

அவனைப் பற்றிக் கேள்விப்பட்ட அந்நாட்டு மன்னன் அவனை அரண்மனைக்கு வரவழைத்தான். அவன் மன்னனைக் காணச் சென்றபோது இளவரசியும் அங்கே இருந்தாள். மன்னன் அவனிடம் "நீ வெகுநேரம் கடலினுள் இருக்க முடியுமாமே. உனக்கு இணையாக இதில் யாருமே இல்லையாமே. இது உண்மைதானா?" என்று கேட்டான்.

மீனவனின் மகனும் "மற்றவர்களைப் பற்றித் தெரியாது. நான் கடலுக்குள் வெகுநேரம் இருக்க முடியும்" என்றான். அதைப் பரீட்சிக்கலாம் என்ற கூறி மன்னன் தன் மகளோடு தன் கப்பலில் ஏறிக் கொண்டு மீனவனின் மகனையும்

திருப்பதோடு அல்லாமல் கடலில் குதித்து மூழ்கி நீரின் அடியிலுள்ள பல வகைப்பட்ட பிராணிகளையும் தாவரங்களையும் கண்டு களிக்கலானான்.

இப்படியாக அவனுக்கு நீரினுள் வெகு நேரம் மூழ்கி இருக்கும் பழக்கம் ஏற்பட்டது. அவன் கடலினுள் வெகு ஆழத்திற்குச் சென்று வெகுநேரம் வரை இருந்து விட்டு வருவதுபோல வேறு யாராலும் இருக்க முடியவில்லை. அவன் காலையில் கடலில் குதித்து அலைந்து திரிந்துவிட்டு மாலையானதும் வீடு திரும்பும் பழக்கத்தைக் கொண்டுவிட்டான்.

அவன்தான் கடலினுள் கண்டவற்

ஏற்றிக் கொண்டான். கப்பல் நடுக்கடலில் சென்றபோது மன்னன் ஒரு தங்கக் கிண்ணத்தைக் கடலுக்குள் போட்டுவிட்டு மீனவனின் மகனிடம் அதை எடுத்து வரச் சொன்னான். அவனும் கடலில் குதித்து மூழ்கி தங்கக் கிண்ணத்தையும் கடலடியில் இருந்த ஒரு பவளக் கொடியையும் எடுத்து வந்தான். கிண்ணத்தை மன்னனிடமும் பவளத்தை இளவரசியிடமும் கொடுத்தான். மன்னன் அக் கிண்ணத்தை அவனுக்குப் பரிசாக அளித்தான்.

பிறகு, அவன் மீனவனின் மகனிடம் "நீ நமது தீவைச் சுற்றி வந்து என்னென்ன கடலுக்கு அடியே உள்ளன என்று சொல்ல வேண்டும்" என்றான். அதற்கு அவன் "அதைச் சொல்ல முடியும். ஆனால் கடலுக்குள் தீவைச் சுற்றிவரக் கொஞ்ச காலம் பிடிக்குமே" என்றான்.

மன்னனும் "அது எனக்குத் தெரியும். அதுவரை காத்திருக்கிறேன்" என்றான். மீனவன் மகனுக்குக் கடலுள் தீவைச் சுற்றி வர மூன்று மாதங்கள் பிடித்தன. அவன் திரும்பி வந்து மன்னனிடம் "அரசே! இந்தத் தீவு மூன்று பெரும் பாறைகளின் மீது நிற்கிறது. அவற்றில் இரண்டு பாறைகள் உறுதியாக உள்ளன. ஆனால் ஒரு பாறை மட்டும் அதற்கு



அடியே உள்ள வடவாக்கினியால் கரைந்து கொண்டே இருக்கிறது" என்றான்.

மன்னனும் "வட வாக்கினியா! அப்படி ஒரு அக்னி கடலுக்குள் இருப்பதாகக் கேள்விபட்டிருக்கிறேனேயொழிய அதைக் கண்ணால் கண்டதில்லை. நீ அதிலிருந்து கொஞ்சம் அக்னியை எடுத்து வா, பார்க்கலாம்" என்றான்

மீனவனின் மகனோ "அது மிகவும் சிரமமான வேலையாயிற்றே. அதனை அணுகக் கூட முடியாதே" என்றான். மன்னனோ "அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ என்ன செய்வாயோ ஏது செய்

வாயோ. வடவாக்னியில் கொஞ்சம் எடுத்து வர வேண்டும்'' என்றான். மீனவனின் மகனும் கடலில் குதித்தான்.

அவன் திரும்பி வந்தபோது அவனது உடலில் பல இடங்களில் தீப்புண்கள் ஏற்பட்டிருந்தன. அவன் மன்னனிடம் ''அரசே! என்னால் வடவாக்னியை எடுத்து வர முடியவில்லை. அதை அணுகிய போது என் உடலில் ஏற்பட்ட காயங்கள் இவை. மேலும் இம்முறை அந்தப் பாறை மேலும் கரைந்து போனதைக் கண்டேன். இன்னும் சில நாட்களில் இந்தத் தீவு சரிந்து கடலுக்குள் விழுந்துவிடும் எனவே இங்குள்ள மக்களை வேறு பத்திரமான இடத்திற்குப் போகச் சொல்லுங்கள்'' என்றான்.

மன்னனும் ''நீ சொல்வதை நம்புகிறேன். இன்றே எல்லோரும் தீவைக் காலி செய்துவிட்டுப் போக வேண்டும் என்க் கட்டளை இடுகிறேன். அவர்கள் மறு வாழ்விற்கான ஏற்பாடுகளைச் செய்கிறேன்'' என்றான். அவனது கட்டளைப்படி அத்தீவின் மக்கள் வேறு இடங்களுக்குச் சென்றனர்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் அத்தீவு கடலில் மூழ்கிவிட்டது. அப்போது மன்னன் மீனவனின் மகனை அழைத்து ''உன்னால் பல உயிர்கள் காப்பாற்றப்பட்டன. பொருள் சேதம் தவிர்க்கப்பட்டது. நீ செய்த இந்த மகத்தான பணிக்காக என்ன பரிசு வேண்டுமோ கேள். நான் கொடுக்கிறேன்'' என்றான்.

மீனவனின் மகன் இளவரசியைப் பார்க்கவே அவளும் நாணித் தலைகுனிந்தாள். மன்னனுக்குத் தன் மகளின் விருப்பம் என்ன என்று தெரிந்துவிட்டது. அவன் உடனேயே அந்த வீர இளைஞனுக்குத் தன் மகளை விவாகம் செய்து வைத்து அரண்மனையிலேயே சுகமாக வாழச் செய்தான்.





# நீலாவும் மணியனும்

மணியன் ஒரு பூந்தோட்டத்தின் பக்கம் வந்தபோது ஒரு பெண் அலறுவதைக் கேட்டு தோட்டத்திற் குள் ஓடினான். அங்கு ஒரு முரடன் கத்தியைக் காட்டி அவள் அணிந்திருந்த நகைகளையெல் லாம் கழற்றித் தருமாறு மிரட்டிக் கொண்டிருந்தான். மணியன் அவன் மீது திடீரெனப் பாய்ந்து அவனது கத்தியைத் தட்டிவிட்டதோடு அவனைப் பலமாகத் குத்தினான். திடீர்த் தாக்குதலால் பயந்த முரடன் அந்த இடத்தைவிட்டு ஓடிவிட்டான்.

மணியன் அப் பெண்ணிடம் "நீ யாரம்மா? துணையில்லாமல் இப்படி வரலாமா? என்று கேட் டான். அவளும் "நீங்கள் செய்த உதவிக்கு என்றென்றும் கடன் பட்டிருக்கிறேன்.என் பெயர் நீலா. என் தந்தை அத்தர் தயாரிப்பவர். அதனால் தினமும் அவருக்கு மலர் களைப் பறித்துக் கொண்டு போய்க் கொடுத்தாக வேண்டும். அவர் தயாரித்துக் கொடுக்கும் அத்தரை நான் விற்றும் பணம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். அவரோ வயதானவர் என்னோடு வர முடியாது" என் றாள்.

அப்போது மணியன் "நல்ல வேளை. சமயத்தில் நான் வந்து உன்னையும் உன் நகைகளையும் காப்பாற்றினேனே" எனவே நீலா வும் "நீங்கள் யாரோ?" என்று கேட்டாள். அவனும் "என் பெயர் மணியன். அடுத்த ஊர்க்காரன். என் தந்தை என்னைத் தச்சு வேலை செய்து பணம் சம்பாதிக் கச் சொன்னார். ஆனால் எனக்கு பல வேலைகள் தெரியுமாதலால் ஊர் ஊராகப் போய் வேலை

—சங்கர சுவாமி—



களைச் செய்து என் தகப்பனாரை சுகமாக வாழ வைத்துக் கொண்டிருக்கிறேன். என் தந்தையோ என் ஊரிலேயே நான் இருக்க வேண்டும் என்கிறார். அது முடியாது என்று அவரைத் தனியே விட்டு நான் பல வேலைகளைப் பல இடங்களில் செய்கிறேன்'' என்றான்.

நீலாவும் ''நீங்கள் உங்கள் தந்தையைத் தனியே விட்டு வந்தது போல் என்னால் விட்டுவிட முடியாது. அவர் நான் கொண்டு வரும் பணத்திலே வாழ வேண்டும். எனக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமே என்ற கவலை வேறு அவருக்கு'' என்றாள்.

மணியனும் ''உன் கல்யாணத்தைப் பற்றி இனி அவர் கவலைப் பட வேண்டாம். நான் இருக்கிறேனே. உன்னை நானே கல்யாணம் செய்து கொள்கிறேன்'' என்றாள். ஆனால் நீலாவோ ''நீங்கள் தீர்மானித்துவிட்டால் போதுமா? நான் சம்மதிக்க வேண்டாமா? நான் உங்களை மணந்து கொள்ள மாட்டேன் எனக்கு விருப்பம் இல்லை'' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

ஆனால் மணியன் மனம் தளர்ந்துவிடவில்லை. தினமும் அந்தத் தோட்டத்திற்கு வந்து நீலாவுக்கு மலர்களைப் பறித்துக் கொடுத்தான். அவ்வப்போது சிறு பொருள்களைப் பரிசாகவும் அளித்தான். அவள் அவன் செய்த உதவியையும் பரிசுகளையும் ஏற்றும் கொண்டாள். ஆனால் அவனை மணக்க மட்டும் சம்மதிக்கவில்லை.

அவர்கள் இருவர் விவகாரத்தையும் கவனித்து வந்த ஒரு கிழவி நீலாவிடம் ''ஏன் மணியனை மணக்கக் கூடாது?'' எனக் கேட்டாள். அவளோ தனக்கு இஷ்டம் இல்லை என்று கூறினாள். அது கேட்டு அவள் மணியனைக் கண்டு ''நீயும் எப்படியெல்லாமோ முயற்சித்தும் நீலாவின் மனதைக் கவர முடியவில்லை. இந்நிலையில் நீ ஏன் உன் ஊரைவிட்டு தினமும்

வருகிறாய்? அவள் மனம் இரங்கும்படி ஏதாவது செய்து அவள் அன்பைப் பெற முயன்று பார்'' என்றாள்.

மணியனும் கிழவி கூறியபடி ஏதாவது செய்து அவள் அன்பைப் பெற வேண்டும் என நினைத்து ஒரு நாள் மலர்களைப் பறிக்கும் போது உயர இருந்து கீழே விழுந்து காயமுற்றான். நீலா உடனே ஓடி ஒரு வைத்தியரை அழைத்து வந்து அவனது காயத்துக்கு மருந்து போடச் செய்தாள்.

அப்போது அவள் "நீங்கள் விழுந்து காயமடைந்ததற்கு பதிலாக நான் விழுந்து இறந்து போயிருந்தால் என் பிரச்னை எல்லாம் தீர்ந்திருக்கும். என்றாள். அதை அங்கே இருந்து கேட்டுக் கொண்டிருந்த கிழவி நீலாவைத் தனியே அழைத்துப் போய் "பையன் புத்திசாலியும் அழகாயும் இருக்கிறான். உன் மேல் உயிரே வைத்திருக்கிறான். உன்னை ஒரு முறை காப்பாற்றி இருக்கிறான். நான் சொல்வதைக் கேள். அவனைக் கல்யாணம் செய்து கொள். சுகப்படுவாய்'' என்றாள்.

நீலாவும் "பாட்டி! இதோ பார். என் தந்தை என்னைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கி வருகிறார். ஆனால் இவரோ தன் தந்தை சொல்கிறபடி வேலை



செய்யாமல் ஊர் சுற்றுகிறார். இப்படிப்பட்டவரை நான் எப்படி மணந்து கொள்வேன்?'' என்று கேட்டாள்.

கிழவியும் "உன் தந்தை உன்னை வேலை வாங்குகிறான் என்றால் அவன் உன் கல்யாணத்திற்காகப் பணம் சேர்க்கத்தானே? நீ வீட்டோடு இருந்தால் பணம் தானே வந்துவிடுமா? எனவே அவன் செய்வது உன் நன்மைக்குத்தான்'' என்றாள்.

அப்போது நீலா "அப்படியே இருந்தாலும் ஏழையான இந்த மணியனைக் கல்யாணம் செய்து கொண்டால் நான்தானே கஷ்டப் பட வேண்டி வரும்!'' என்றாள்.



மறுநாள் கிழவி மணியனைப் பார்த்து நீலா கூறியதைச் சொன்னாள். அதைக் கேட்ட மணியன் நீலாவைக் கண்டு "நான் என் தந்தையைச் சரிவர கவனிக்கவில்லை என்று நீ நினைப்பது தவறு. நீயே போய் என் தந்தையிடம் பேசிப் பார். அப்போது நீ என்னைப் பற்றி நினைத்ததெல்லாம் தவறு என்று உணர்வாய்" என்று கூறினான்.

நீலாவும் "அப்படியா? நாளையே நானும் அந்தக் கிழவியும் போய் உங்கள் தந்தையைப் பார்த்து விட்டு வருகிறோம். அப்போது எல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும்" என்றாள். மறுநாள் நீலா கிழவியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு மணியனின் ஊருக்குச் சென்றாள். அவர்கள் அந்த வீட்டை அடைந்தபோது திகைத்துப் போனார்கள். அது பெரிய மாளிகையாக இருந்தது. வேலைக்காரர்கள் பலர் அந்த வீட்டில் இருந்தார்கள்.

அந்த வீட்டு எஜமான் வயதானவன் அவனை நீலா கண்டு "நான் நல்ல வாசனை அத்தர் விற்கக் கொண்டு வந்திருக்கிறேன். இங்கு வேறு யாராவது இருக்கிறார்களா? வாங்கிக் கொள்வார்களா?" என்று கேட்டாள். கிழவனும் "இருக்கிறான் ஒருவன். ஆனால் நல்ல வேளையாக இப்போது அவன் இங்கே இல்லை. அவன் ஊர்ஊராகச் சுற்றிக் கொண்டே இருப்பான். என் மகன் தான் அவன். பெயர் மணியன். இங்கேயே இருந்து வேலை செய் என்றால் ஊர் ஊராக அலைகிறான்" என்றான்.

அப்போது கிழவி "நீங்கள் பெரிய பணக்காரர் போலத் தெரிகிறதே. உங்கள் மகன் ஏன் வேலை செய்ய வேண்டும்?" என்று கேட்டாள். அதற்கு அவன் "நன்றாக இருக்கிறதே நீங்கள் சொல்வது? நான் இந்த மாதிரி நினைத்துத்தான் என் முன்னோர் வைத்துவிட்டுப் போன சொத்தை படாடோபத்தோடு வாழ்ந்து

அழித்துவிட்டேன். முடிவில் ஒரு குடிசையில் கஷ்டப்பட்டு வாழ்ந் தேன். வைத்தியம் பார்க்கப் பண மில்லாமல் நோய் வாய்ப்பட்ட என் மனைவியை இழந்தேன். அதே கவலையில் நானும் நோய் வாய்ப்பட்டு படுத்துவிட்டேன். என் மகன் மணியன் தான் கஷ்டப் பட்டு ஊர் ஊராகப் போய் பணம் சம்பாதித்து ஐந்து வருடங்களுக் குப்பின் இந்த மாளிகையை வாங்கினான். நான் முன்போல் வாழ வசதிகளைச் செய்தும் கொடுத்திருக்கிறான்'' என்றான்.

கிழவியும் ''ஆனால் எங்கள் ஊருக்கு வந்த உங்கள் மகன் எளிய உடையில் ஏழைபோலல்லவா இருந்தான்! இது ஏன்?'' என்று கேட்டாள். அதுகேட்டு அவன்பல மாகச் சிரித்து ''அவனும் என் போல் ஆடம்பர வாழ்வு வாழக் கற்றுக் கொண்டால் அவன் சம்பா தித்தது எல்லாம் போய்விடும். மேலும் இப்போது அவன் சம்பா திப்பது நான் இப்படி வசதியாக வாழத்தான். போதுமானதாக இருக்கிறது. அதனால்தான் அவனை நான் ஏழை வாழ்வு வாழச் சொல்லி இருக்கிறேன். அவன் தனக்கும் சம்பாதிக்கவே வேண்டு மானால் வேலை செய்துதானே ஆக வேண்டும்'' என்றான்.

அப்போது நீலா அத்தரை எடுத் துக் காட்டவே அவனும் ''நல்ல



வேளை. என் மகன் இல்லாத போது வந்தாய். இதை எல்லாம் அவன் தண்டச் செலவு எனக் கூறி வாங்க வேண்டாம் என்று தடுத்து விடுவான். என்னை மது அருந்த விட மாட்டான். இதெல்லாம் எதற்கோ?'' என்று அலுத்துக் கொண்டான்.

நீலாவும் கிழவியும் அங்கிருந்து தம் ஊருக்கு திரும்பி வந்தார்கள். அப்போது கிழவி நீலாவிடம் ''பார்த்தாயா நிலமை என்ன வென்று?'' என்றாள். நீலாவோ கிழவிக்கு பதில் எதுவும் கூற வில்லை. ஊருக்கு வந்ததும் அவள் மணியனைக் கண்டு ''உங்கள் தந் தையைப் பார்த்தேன்'' என்றாள்.

மணியனும் சிரித்துக் கொண்டே "நானும் உன் தந்தையைக் கண்டு பேசினேன். அவர் என்னைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டார். எனக்கு அத்தர் தயாரிக்கும் முறையையும் கற்றுக் கொடுப்பதாகக் கூறினார். இப்போது சேர்த்துள்ள பணம் நமக்கே என்றார். விரைவிலேயே என் தந்தையைச் சந்தித்து நம் விவாக விஷயத்தைப் பேசி முடிப்பதாகவும் கூறினார்" என்றான்.

நீலா அப்போது "நான் இந்தக் கல்யாணத்திற்கு சம்மதிப்பேன் என்று எப்படி ஊகித்தீர்கள்?" என்று கேட்டாள் மணியனும் "எப்படியா? என் தந்தையோடு யார் பேசிவிட்டு வந்தாலும் அவர் என்னைப் பற்றி நல்ல அபிப்பிராயமே கொள்வார். நீயும் அவ்விதம்தான் நினைப்பாய் என எனக்குத் தெரியும். அதனால்தான் உன்னை என் தந்தையிடம் அனுப்பினேன்" என்றான்.

நீலா மணியனின் தந்தை சொன்னதை எல்லாம் கேட்ட பிறகு அவன் எவ்வளவு நல்லவன் என்றும் தன் தந்தை சுகமாக வாழ எவ்வளவு பாடு பட்டான். என்றும் தெரிந்து கொண்டாள். தன் தந்தை பணம் சேர்ப்பதும் அவளைச் சுக வாழ்வு வாழ வைக்கவே எனப் புரிந்து கொண்ட நீலா மணியனையே மணந்து கொள்ள முடிவு செய்து கொண்டாள். கண்ணால் காண்பதும் பொய்யே, காதால் கேட்பதும் பொய்யே, தீர விசாரித்து அறிவதே மெய் என்பது மணியன் விஷயத்தில் சரியானது.

அதன் பிறகு நீலாதான் அவனை மணந்து கொள்ளச் சம்மதிப்பதாகக் கூறினாள். அதன்பின் அவளுக்கும் மணியனுக்கும் ஆடம் பரமில்லாமல் விவாகம் நடைபெற்றது.



# இயற்கை விநோதங்கள்




## முண்டாந்துறைக் காடுகள்

தமிழகத்தில் முண்டாந்துறை ரிசர்வ் காடுகள் அண்மையில் பலரது கவனத்தை ஈர்த்துள்ளது. இங்கு புலிகள் அதிகமாகி வருவதும் கொண்டையும் சடைகளும் கொண்ட ஒருவகை விசித்திரப் பறவைகள் வந்ததுமே இதற்குக் காரணம் ஆனால் இப்பறவைகள் ஆறு வருடங்களுக்கு முன் வந்தன. இப்போது வருமா எனக் காத்துக் காத்துப் பார்க்கிறார்கள். கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த மதசூதன் கட்டி என்ற இந்திய இளைஞர் இந்த ரகப் பறவைகள் பற்றி ஆராய்ந்து வருகிறார். சென்னைக்கு அருகேயுள்ள வேடந்தாங்கல் பறவைகள் சரணாலயத்தில் பலவிதமான பறவைகள் வந்து போகின்றன. அவற்றில் இந்த ரகப் பறவைகளும் வருகின்றன. நம் நாட்டின் மிகப் பழைய பறவைகள் சரணாலயங்களில் இது ஒன்றாகும்.

## திமிங்கலங்களின் தற்கொலை

நியூஜிலாந்தில் நெல்சனின் பேர்வெல் ஸ்வீட் கடற்கரையில் ஒரு விசித்திர சம்பவம் நிகழ்ந்தது. ஆழ் கடலில் நீந்தித் திரியும் 99 திமிங்கலங்கள் திடீரென ஒன்றாகக் கடற்கரைக்கு வந்தன. அவை கரையேற முயன்று திமிங்கலங்கள் ஒன்றன் மீது ஒன்று விழுந்து நசுங்கி அந்த நெரிசலில் பல திமிங்கலங்கள் மூச்சுத் திணறி இறந்து போயின. மிகுந்த திமிங்கலங்களைச் சிலர் கடலில் துரத்தியும் அவை போகாமல் கரையில் ஒன்றன் மீது ஒன்று விழுந்து இறந்தன. இதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை.



## பறவைகளின் எண்ணிக்கை

நீங்கள் ஓய்வு நேரத்தில் பறவைகளைக் கணக்கிட முடியுமா? கடந்த நவம்பர் 16ந்தேதி 5000 பேர்கள் பறவைகள் கணக்கிட ஒப்புக் கொண்டார்கள் என்றால் ஆச்சரியமாக இல்லை? அவர்களுக்குச் சாதாரணமாகக் காணப்படும் 170 பறவைகளின் பெயர்களடங்கிய பட்டியல் தரப்பட்டது. அவர்கள் தாம் பார்த்த பறவைகளின் எண்ணிக்கைகளை அப் படிவங்களில் எழுதி அனுப்ப வேண்டும். இது ஒரே நாளில் எடுக்கப்படும் கணக்கு. பிரபல பறவை வல்லுனரான நம் நாட்டு டாக்டர் சலீம் அலி நினைவாக இது வகுக்கப்பட்டது. நவம்பர் 12 அவரது பிறந்த நாள். அதைத் தொடர்ந்து வந்து ஒரு விடுமுறை நாளில் இந்தக் கணக்கெடுப்பு நடந்தது.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 மே மாத இதழில் வெளியிடப்படும்**


PRAMOD BHANUSHALI


DEVIDAS KASBEKAR

* தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். * மார்ச் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.
* எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. * தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **பழகப் பழகத் திறமை வளரும்**

இரண்டாவது போட்டோ: **படிக்கப் படிக்க அறிவு வளரும்**

பரிசு பெற்றவர்: **க. ஜெயா, வள்ளியூர், நெல்லை மாவட்டம்**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

AMBULIMAMA (Tamil)
March 1994
Regd. No. M. 4863

# தின்ன தின்ன ஆசை
# திகட்டவில்லை ஆசை

**nutrine Aasay**

**இலவசம்!**

25 நியூட்ரின் ஆசை ரேப்பர்களுக்கு
6 ஸ்டாம்ப் ஸ்டிக்கர்கள்.
அனுப்பவேண்டிய முகவரி:
த.பெ. எண்: 2574, சென்னை - 600 031.







இந்த சலுகை இல்லாமலும் நியூட்ரின் ஆசை கிடைக்கும்.